# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 12
இதழ் 10

விகாரி௵
ஆடிமீ

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

# தர்ம சாஸ்த்ரச் சுருக்கம்.

கிழவிடையல் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர் 1917-ம் வருஷத்தில் இயற்றியதின் **நான்காம் பதிப்பு.**

ப்ராஹ்மணர்களின் கர்மானுஷ்டானங்களை விவரிக்கும் **வைத்யநாத தீக்ஷிதீயம்** என்ற தர்ம சாஸ்த்ரத்தின் **ஆறு காண்டங்களையும்** ஸங்க்ரஹமாய் தமிழில் வெளியிடப்பட்டது. **விலை ரூ. 3–00,** முன்பணம் ரூ. 3–82 } வி. பி. யில் ரூ. 4–00 }

**கிடைக்குமிடங்கள் :** **கே. எம். நாகராஜ அய்யர்**
கிழவிடையல், கருப்பூர்–குடவாசல் P. O. (தஞ்சைஜில்லா)

2 **கிரி டிரேடிங் ஏஜன்ஸி,** Religious Book Sellers & Publishers (Near Mathunga Railway Station,)
Bombay-19.

3 S. V. V. **தீக்ஷிதர்,** 25. C. வடக்கு மாடவீதி,
மைலாப்பூர், மதராஸ்–4.

**விகாரிஸூ ஆடிமீ கிரீஷ்மருது. தக்ஷிணயனம்.**

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 17 (1959ஞு ஜூலை மீ) | வெள். | த்வா. | 30-02 | கேட். | 50-47 | ம. அ. | — |
| 2 | 18 | சனி | த்ர. | 22-20 | மூலம். | 45-07 | ஸி. | சஸி. |
| 3 | 19 | ஞா. ○ | சஸி. | 14-45 | பூரா. | 39-50 | ஸி. அ. | பௌ |
| 4 | 20 | திங். | பௌ. | 7-48 | உத்தி. | 35-20 | ம. அ. | ப்ர. |
| 5 | 21 | செவ். | ப்ர. | 1-52 | ஸிர. | 32-05 | ஸி. | த்வி. |
| | | | த்வி. | 57-20 | | | | |
| 6 | 22 | புதன் | த்ரி. | 54-27 | அவி. | 30-22 | ஸி. | த்ரி. |
| 7 | 23 | வியா. | சது. | 53-30 | சத. | 30-25 | ம. ஸி. | சது. |
| 8 | 24 | வெள். | பஞ். | 54-35 | பூரட். | 32-30 | ஸி. | பஞ். |
| 9 | 25 | சனி | ஷஷ். | 57-32 | உத்தி. | 36-28 | ஸி | ஷஷ் |
| 10 | 26 | ஞா. | ஸப். | 60-00 | ரேவ. | 42-05 | அ ஸி. | சப். |
| 11 | 27 | திங். | ,, | 2-00 | அசு. | 48-53 | ஸி. | அஷ் |
| 12 | 28 | செவ். | அஷ். | 7-40 | பர. | 56-20 | ஸி. | நவ. |
| 13 | 29 | புத. | நவ. | 13-47 | க்ருத். | 60-00 | அ. | தச. |
| 14 | 30 | வியா. | தச. | 10-47 | ,, | 3-57 | ம. | — |
| 15 | 31 | வெ. | ஏகா. | 25-10 | ரோ. | 10-52 | ம. ஸி. | ஏகா. |
| 16 | 1 (ஆகஸ்டு மீ) | சனி | த்வா. | 29-33 | மிருக. | 17-00 | ஸி. | த்வா. |
| 17 | 2 | ஞா. | த்ர. | 32-42 | திரு | 21-58 | ஸி. | த்ர. |
| 18 | 3 | திங். | சஸி. | 34-35 | புன. | 25-40 | அ. ஸி. | சஸி. |
| 19 | 4 | செவ் ● | அமா | 35-12 | பூச. | 28-07 | ஸி. | அமா |
| 20 | 5 | புதன் | ப்ர. | 34-38 | ஆயி. | 29-25 | ஸி. | ப்ர. |
| 21 | 6 | வியா. | த்வி. | 33-05 | மக. | 29-45 | அ. ஸி. | த்வி. |
| 22 | 7 | வெள். | த்ரி. | 30-40 | பூர. | 29-15 | ஸி. | த்ரி. |
| 23 | 8 | சனி | சது. | 27-30 | உத். | 27-57 | ம. | சது. |
| 24 | 9 | ஞா. | பஞ். | 23-42 | ஹஸ். | 26-00 | அ. ஸி. | ப. ச. |
| 25 | 10 | திங். | ஷஷ். | 19-17 | ஸித். | 23-29 | ஸி. அ. | சப். |
| 26 | 11 | செவ். | ஸப். | 14-20 | சுவா. | 20-25 | ஸி ம. | அஷ் |
| 27 | 12 | புதன் | அஷ் | 8-50 | விசா. | 16-50 | ஸி. | நவ. |
| 28 | 13 | வியா | நவ. | 3-00 | அனு. | 12-55 | ஸி. | தச. |
| | | | தசமி | 56-58 | | | | |
| 29 | 14 | வெள். | ஏகா. | 50-50 | கேட். | 8-48 | ம. அ. | ஏகா. |
| 30 | 15 | சனி | த்வா. | 44-53 | மூல. | 4-40 | ஸி. | த்வா. |
| 31 | 16 | ஞா. | த்ர. | 39-22 | பூரா. | 0-47 | ஸி. அ. | த்ர. |
| | | | | | உத்தி. | 57-25 | | |

1௳ தக்ஷிணயனபுண்யகாலம், 1,16௳ப்ர. 13௳ கிரு. 15,29௳ஏகா. 19௳ அமா. 24௳ ஸாம, ருக் உபாகர்மா. 29௳ வரலக்ஷ்மி விரதம்.

**குரு ப்ரத்யக்ஷ பேசும் தெய்வம்.**

# வைதிக தர்ம வர்த்தனீ.



விகாரிஞ ஆடிமீ

மலர் 12] [இதழ் 10.

தனிப்ரதி அணா 7.

வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம்: கடவாசல்,

வடகால் P.O. (Via.) சீர்காழி.

(தஞ்சை ஜில்லா.)


## பொருளடக்கம்.



## நவரஸப் பகுதி.

(கௌண்டின்யன்)

**நீ வா! உன்னைக் கட்டி அழுகிறேன்:** வ்யாஸ பாரதம் கூறினர் ஒரு சாஸ்திரிகள். கர்ணன் அடிபட்டு இறந்த கட்டம். தமிழ் பாரதங்கேட்ட ஒருவர், ஐயா! குந்தி கர்ணன் மீது விழுந்து அழுததைச் சொல்ல வில்லையே! என்றார். கோபங்கொண்ட சாஸ்திரி, இங்கு இவ்வளவுதானுண்டு அதற்குமேலில்லை! த.பா. கேட்டவர்: என்ன ஸ்வாமி முக்யமானதை விட்டு விட்டீர்களே! ஸதஸ்ஸில் இந்த அவமானம் பொருத சாஸ்திரி ஆத்திரம் பொங்க, நீ வா! நான் உன்னைக் கட்டி அழுகிறேன்! என்றார். கோபங் கூடாது.

**மம என்று சொல்லுகிறது:** லௌகிகர் உபாத்யாயர் சொல்வதெல்லாம் மந்த்ரம் என ஒன்றுகூட விடாமல் கூறவேண்டுமென சிரத்தையுள்ளவர் சிலர். ''கை அலம்பி''என ஸம்ஸ்கிருதத்தில் சொல்வதை வாத்யாருடன் தானும் கூறுவர் அப உபஸ்ப்ருச்ய என. அதாவது பாதகமில்லை தகப்பனுக்கு ச்ராத்தம் செய்யும் போது, ''மம பிது: என்று சொல்கிறது'' என்பர் வாத்யார், அதாவது வாத்யார் பிதாவுக்கல்ல, மமபிது:என்பதை மாத்ரம் கூறுமென்பார். லௌகிகர் அவர் சொன்னபடியே ''மமபிது என்று சொல்கிறது'' என்பர்.

**அதுவும் மாயையே:** அத்வைத க்ஞானம் ஈச்வராநுக்ரஹத்தால்தான் உண்டாகும். அநுபவ க்ஞானத்திற்கு ஸத்குரு அருள் வேண்டும். அரைகுறை க்ஞானமுள்ள சிஷ்யன் (எல்லாம் பிரும்மம், உலகெலாம் மாயை) என்று கேட்டு ஸகலமும் புரிந்து அநுபவம் வந்ததாக எண்ணி சென்றான். மதயானை வழியில் வர, பாகன் இது கொன்றுவிடும், விலகு! விலகு! எனக் கத்தினன். வேதாந்தி சிஷ்யன், யானையும் பிரும்மம்! நானும் பிரும்மம்! எனத் தைர்யமாக நடந்தான். யானை அவனைத் தூக்கி எறிய நல்லகாலமாக வைக்கல்போர்மீது விழுந்து சாகாமல் குருவிடம் வந்தான். சிஷ்: எல்லாம் பிரும்மமானல் யானை ஏன் என்னைத் தூக்கி எறிந்தது? குரு: பாக பிரும்மம் சொற்படி நடந்திருந்தால் யானை பிரும்மம் சிஷ்ய பிரும்மத்தை எறிந்திராது. சிஷ்: உலகெலாம் மாயை, என்றீர்களே! குரு: ஆம்! யானை உன்னை எறிந்ததும் மாயையே!

ஒருபோதும் குரு சொல்லைத் தட்டாதே.

# ஆச்வலாயநீய ஸந்த்யாவந்தனம்.

**अच्युताय नमः अनन्ताय नमः गोविन्दाय नमः केशव, नारायण, माधव, गोविन्द, विष्णो, मधुसूदन, त्रिविक्रम, वामन, श्रीधर, हृषीकेश, पद्मनाभ, दामोदर ॥**

அச்யுதாய நம: அனந்தாய நம: கோவிந்தாய நம: (என்று மும்முறை ஜலமருந்தி கையை அலம்பி) **கேஶவ, நாராயண** எனக்கூறி இரண்டு உதடுகளையும் துடைத்தும், மோதிர விரலால் **மாதவ** எனக்கூறி வலது கண்ணையும். **கோவிந்த** என்று இடது கண்ணையும், **விஷ்ணோ** எனக்கூறி வலது மூக்கையும், மது4ஸூத3ந என்று இடது நாசியையும், (ஆள்காட்டிவிரலால்) **த்ரிவிக்ரம** எனக்கூறி சுண்டுவிரலால் வலது செவியையும், **வாமந** என்று இடது காதையும், **ஸ்ரீதர** என்று நடுவிரலால் வலது தோளையும் **ஹ்ருஷீகேஶ** என்று இடது தோளையும், **பத்ம3நாப4** என்று நாபியையும், **தா3மோதர** என்று ஐந்து விரல்களாலேயும் தலையையும் தொட்டுக்கொள்ள வேண்டும். இம்மாதிரி இருமுறை ஆசமனம் செய்தபின்னர்

**शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।**
**प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोप शान्तये ॥**

ஶுக்லாம் பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்னவத3நம் த்4யாயேத் ஸர்வவிக்4னோப ஶாந்தயே ॥

(எனக்கூறி தலையில் குட்டிக்கொண்டு **ப்ராணாயாமம்** செய்யவேண்டும்.)

**ओं भूः ओं भुवः ओं सुवः ओं महः ओं जनः ओं तपः ओं सत्यम् ओं तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियोयोनः प्रचोदयात् । ओमापो ज्योतीरसोऽमृतं ब्रह्मभूर्भुवस्सुवरोम् ॥**

ஓம் பூ4: ஓம் பு4வ: ஓம் ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜந: ஓம் தப: ஓம் ஸத்யம் ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் ப4ர்கோ3 தே3வஸ்ய தீ4மஹி । தி4யோயோந: ப்ரசோத3யாத் ॥

ஓமாபோ ஜ்யோதிரஸோऽம்ருதம் ப்[3]ரஹ்ம பூ[4]ர்பு[4]வ ஸ்ஸுவரோம் ॥ (என்று வலது கையால் வலது செவியை மூடிக்கொள்ளவும்.)

**ममोपात्त समस्त दुरितक्षयद्वारा श्री परमेश्वरप्रीत्यर्थं प्रात-स्सन्ध्या मुपासिष्ये ॥**

மமோபாத்த ஸமஸ்த து[3]ரிதக்ஷயத்[3]வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம் ப்ராதஸ் ஸந்த்[3]யா முபாஸிஷ்யே (எனக் காலையிலும்) மாத்[4]யாந்நிகம் கரிஷ்யே (எனப் பகலிலும்) ஸாயம் ஸந்த்யா முபாஸிஷ்யே (என மாலையிலும்) ஸங் கல்பம்.

ஓம் ஸ்ரீகேசவாய நம: என்றுகூறி நடுவிரலால் ஜலத்தில் ப்ரணவமெழுதி நெற்றியில் இட்டுக்கொள்ளவும்.

**आपोहिष्ठे त्यृचस्य सिन्धुद्वीपऋषिः। गायत्रीच्छन्दः। आपो देवता। मार्जने विनियोगः ॥**

ஆபோஹிஷ்டேத்ருசஸ்ய ஸிந்து[4]த்[3]வீபரிஷி: (என்று தலையைத் தொட்டும்) க[3]ாயத்ரீச்ச[2]ந்த[3]: (என்று மூக்கையும்) ஆபோ தே[3]வதா (என்று மார்பையும்) தொட்டு மார்ஜநே விநியோக[3]: ॥

**आपोहिष्ठा मयोभुवः। तान ऊर्जे दधातन। महेरणायचक्षसे। योवः शिवतमोरसः। तस्यभाजयतेहनः। उशतीरिव मातरः। तस्मा अरङ्ग मामवः। यस्यक्षयाय जिन्वथ ॥**

ஆபோஹிஷ்ட[2]ா மயோபு[4]வ: | தானஊர்ஜே த[3]த[3]ாதன | மஹேரணாய சக்ஷஸே | யோவச்சிவதமோரஸ: | தஸ்ய ப[4]ாஜயதேஹன: | உசதீரிவ மாதர: | தஸ்மா அரங்கமாமவ: | யஸ்யக்ஷயாய ஜின்வத[2] ॥

ஆபோஹிஷ்டேதி முதல் ஒவ்வொரு வாக்யத்தையும் கூறி ஜலத்தை சிரஸ்ஸின்மீது ப்ரோக்ஷித்துக்கொண்டு யஸ்யக்ஷயாய ஜின்வத என்று சொல்லி வலது பாதங்களின்மீதும் ப்ரோக்ஷித்துக்கொண்டு கடைசியாக மறுமுறையும்

**आपोजनय थाचनः ॥ ओं भूर्भुवस्सुवः ॥**

---

ஆபோஜனயத²ாசந: என்று கூறி சிரஸ்ஸின் மீது ப்ரோக்ஷித்துக்கொண்டும் ஓம் பூ⁴ர்பு⁴வஸ்ஸுவ: என்று சொல்லிக் கையில் ஜலத்தை எடுத்துத் தன் சிரஸ்ஸை ப்ரதக்ஷிணம் செய்யவும்.

**सूर्यश्चेत्यनुवाकस्य अग्निः ऋषिः । गायत्रीछन्दः । सूर्योदेवता । अपांप्राशने विनियोगः ॥ सूर्यश्च मामन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः । पापेभ्यो रक्षन्ताम् । यद्रात्रिया पापमकार्षम् । मनसा वाचा हस्ताभ्याम् । पद्भ्यामुदरेण शिश्ना । रात्रिस्तदवलुम्पतु । यत्किञ्च दुरितं मयि । इदमहं माममृतयोनौ । सूर्ये ज्योतिषि जुहोमि स्वाहा ॥**

ஸூர்யஸ்சேத்யனுவாகஸ்ய அக்³னி: ரிஷி: । என்று தலையையும், காயத்ரீ ச²ந்த³: । என்று நாசியையும், ஸூர்யோ தே⁴வதா ॥ என்று மார்பையும் தொட்டும்

**அபாம் ப்ராஸனே விநியோக³:** வலது உள்ளங்கையில் ஜலமெடுத்துக்கொண்டு

ஸூர்யஸ்ச மாமந்யுஸ்ச மந்யுபதயஸ்ச மந்யுக்ருதேப்⁴ய: । பாபேப்⁴யோ ரக்ஷந்தாம் । யத்³ராத்ர்யா பாபமகார்ஷம் । மநஸாவாசா ஹஸ்தாப்⁴யாம் । பத்ப்⁴யா முத³ரேண ஸிஸ்ஞா । ராத்ரிஸ்தத³வலும்பது । யத்கிஞ்ச துரிதம்மயி । இத³மஹம் மாமம்ருதயோநௌ । ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா ॥

(என்று கூறி ஜலத்தை பானம் செய்து ஆசமனம் செய்யவும்.

**मध्याह्ने — आपः पुनन्त्वित्यस्य मन्त्रस्य विश्वेदेवाऋषयः । अनुष्टुप्छन्दः । आपोदेवता । अपांप्राशनेविनियोगः ॥**

**ओं आपः पुनन्तु पृथिवीं पृथिवी पूता पुनातुमाम् । पुनन्तु ब्रह्मणस्पति र्ब्रह्मपूता पुनातुमां । यदुच्छिष्ट मभोज्यं यद्वा दुश्चरितं मम । सर्वंपुनन्तु मामापोऽसताञ्चप्रतिग्रहं स्वाहा ॥**

(பகலில்) ஆப: புநந்த்வித்யஸ்ய மந்த்ரஸ்ய விஸ்வே தே³வா: ரிஷய: । அனுஷ்டுப் சந்த: । **ஆபோ தேவதா அபாம்ப்ராஸனே விநியோக³: ॥**

---

**கண்ட நூல்களைப் படிக்காதே! புத்தி கெடும்.**

ஓம் ஆப:புனந்து ப்ருதி²வீம் ப்ருதி²வீ பூதாபுநாதுமாம் । புனந்து ப்ரஹ்மணஸ்பதிர் ப்ரஹ்ம பூதாபுனாதுமாம் । யது³ச்சி²ஷ்டமபே⁴ாஜ்யம் யத்³வாது³ஶ்சரிதம் மம । ஸர்வம் புநந்து மாமாபோऽஸதாஞ்சப்ரதிக்ரஹம் ஸ்வாஹா ॥ (என்று கூறி தீர்த்தப்ராஶனம் செய்து ஆசமனம்.)

सायंकाले:—अग्निश्तेच्यस्य मन्त्रस्य सूर्यऋषिः । गायत्रीछन्दः अग्निर्देवता । अपां प्राशने विनियोगः ॥

अग्निश्च मामन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः । पापेभ्यो रक्षन्ताम् । यदह्ना पापमकार्षम् । मनसा वाचा हस्ताभ्याम् । पद्भ्यामुदरेणशिश्ना । अहस्त दवलुम्पतु । यत्किञ्च दुरितंमयि । इदमहं माममृतयौनौ । सत्येज्योतिषि जुहोमि स्वाहा ॥

(மாலையில்) அக்னிஶ்தேச்யஸ்ய மந்த்ரஸ்ய ஸூர்ய ரிஷி: । க³ாயத்ரீச²ந்த³: । அக்³நிர்தேவதா ॥ அபாம் ப்ராஶநே விநியோக³: ॥

அக்நிஶ்ச மாமந்யுஶ்ச மந்யுபதயஶ்ச மந்யுக்ருதேப்⁴ய: । பாபேப்⁴யோ ரக்ஷந்தாம் । யத³ஹ்னபாபமகார்ஷம் । மநஸாவாசா ஹஸ்தாப்யாம் । பத்³ப்⁴யாமுதரேணஶிஶ்னா । அஹஸ்ததத³வலும்பது । யத்கிஞ்ச து³ரிதம்மயி । இதமஹம் மாமம்ருத யோநௌ । ஸத்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா ॥ )எனக்கூறி ஜலப்ராஶனம் ஆசமநம்

दधिक्राव्ण इत्यस्यस्य मन्त्रस्य वामदेवऋषिः । अनुष्टुप्छन्दः विश्वेदेवादेवताः । मार्जने विनियोगः ॥

दधिक्राव्णो अकारिषम् । जिष्णोरश्वस्य वा जिनः । सुरभिनो मुखा करत् । प्रण आयूं षितारिषत् ॥

आपोहिष्ठा मयोभुवः । तान ऊर्जे दधातन । महेरणाय चक्षसे । योवश्शिवतमोरसः । तस्यभाजयतेहनः । उशतीरिवमातरः । तस्मा अरङ्गमामवः । यस्यक्षयाय जिन्वथ । आपोजनय था च नः ॥ ओं भूर्भुवस्सुवः ॥

---

**अर्घ्यप्रदानं करिष्ये। गायत्र्याः विश्वामित्रऋषिः। निचृद्गायत्री छन्दः। सविता देवता। अर्घ्यप्रदाने विनियोगः॥**

**ओं भूर्भुवस्सुवः। तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि। धियोयोनः प्रचोदयात्॥**

. ததி4க்ராவ்ண இத்யஸ்ய மந்த்ரஸ்ய வாமதேவரிஷி: | அனுஷ்டுப்ச2ந்த: | விச்வே தே3வா தே3வதா: | மார்ஜநே விநியோக3: ||

த2தி4க்ராவ்ணோ அகார்ஷம் | ஜிஷ்ணோ ரஶ்வஸ்யவாஜிந: | ஸுரபிநோமுக2ாகரத் | ப்ரண ஆயும்ஷிதாரிஷத் || ஆபோஹிஷ்ட2ா மயோபுவ: | தான ஊர்ஜே த3த4ாதந | மஹேரணாய சக்ஷஸே | யோவஶ் ஶிவதமோரஸ: | தஸ்ய பாஜய தேஹன: | உஶதீரிவமாதர: | தஸ்மா அரங்கமாமவ: | யஸ்யக்ஷயாய ஜின்வத (இரு பாதங்களில்) ஆபோ ஜநயதாசந: ஓம் பூர்புவஸ்ஸுவ: ||

"அர்க்4யப்ரதானம் கரிஷ்யே" காயத்ர்யா: விஶ்வாமித்ர ரிஷி: | நிச்ருத் காயத்ரீசந்த: | ஸவிதா தே3வதா | அர்க்4யப்ரத3ானே விநியோக3: ||

ஓம் பூ4ர்புவஸ்ஸுவ: | தத்ஸவிதுர்வரேண்யம் | ப4ர்கே3ா தே3வஸ்ய தீ4மஹி | தியோயோந: ப்ரசோத3யாத் || (முவ்வேளைகளிலும் மும்முறை அர்க்யம்.) அர்க்4ய ஜலத்துடன் ஆத்மப்ரதக்ஷிணம்செய்து **ஆசமனம்** செய்து ப்ராணாயாமம் செய்யவும்.)

**कालातीत प्रायश्चित्तं करिष्ये॥ यदद्येत्यस्य मन्त्रस्य। शौनक ऋषिः। गायत्रीछन्दः। सूर्यो देवता। प्रायश्चित्तार्घ्य प्रदाने विनियोगः॥ यदद्य कच्च वृत्रहन्नुदगा अभिसूर्य। सर्वंतदिन्द्र तेवशे॥**

காலாதீத ப்ராயஶ்சித்தம் கரிஷ்யே || (காலே) யத3த்3யேத்யஸ்ய மந்த்ரஸ்ய ஶௌநக ரிஷி: | க2ாயத்ரீச2ந்த: | ஸௌர்யோதே3வதா || ப்ராயஶ்சித்தார்க்4ய ப்ரத3ானே விநியோக: | யத3த்3யகச்சவ்ருத்ரஹன்னுத3க3ா அபிஸௌர்ய | ஸர்வம் ததி3ந்த்3ரதே3வஶே || ஓம் பூ4ர்பு4வஸ்ஸுவ: || (மனதால் ஸந்த்யையை த்யானிக்கவும்.)

---

गायत्री रक्तवर्णा ब्रह्मरूपा । असावादित्यो ब्रह्मा । ब्रह्मैवाहमस्मि ।

"காயத்ரீ ரக்தவர்ணா ப்[3]ரஹ்மரூபா | அஸாவாதி[3]த்யோ ப்ரஹ்மா | ப்ரஹ்மை வாஹமஸ்மி || (எனக் காலையிலும்)

उद्वेदभीत्यस्य मन्त्रस्य श्रुतकऋषिः । गायत्रीच्छन्दः । सूर्यो देवता । प्रायश्चित्तार्घ्य दानेविनियोगः । उद्वेदभि श्रुतामघम् । वृषभंनर्यापसम् । अस्तारमेषि ॥

உத்கேதபீத்யஸ்ய மந்த்ரஸ்ய ஶ்ருதகரிஷி: | காயத்ரீச்சந்த: | ஸூர்யோ தே[3]வதா | ப்ராயஶ்சித்தார்க்[4]யதாநே விநியோக: | உத்கேதபி ஶ்ருதாமகம் | வ்ருஷபம் நர்யாபஸம், | அஸ்தாரமேஷி ||

सावित्री शुक्लवर्णा रुद्ररूपा । असावादित्यो ब्रह्मा । ब्रह्मैवाहमस्मि ।

ஸாவித்ரீ ஶுக்லவர்ணா | ருத்[3]ர ரூபா | அஸாவாதி[3]த்யோ ப்ரஹ்மா ப்ரஹ்மை வாஹமஸ்மி || (என பகலிலும்)

नतस्येत्यस्य मन्त्रस्य विश्वमनाऋषिः उष्णिक्छन्दः । अग्निर्देवता । प्रायश्चित्तार्घ्य दानेविनियोगः । नतस्य माययाचन रिपुरीशीत मर्त्यः । यो अग्नये ददाश हव्यदातिभिः ॥

நதஸ்யேத்யஸ்ய மந்த்ரஸ்ய விஶ்வமநா ரிஷி: | உஷ்ணிக்சந்த: | அக்[3]நிர்தே[3]வதா | ப்ராயஶ்சித்தார்க்[4]யதாநே விநியோக: | நதஸ்ய மாயயாசந ரிபுரீஶீத மர்த்ய: | யோ அக்[3]நயே ததாஶ ஹவ்யதாதிபி: ||

सरस्वती कृष्णवर्णा विष्णुरूपा । असावादित्यो ब्रह्मा । ब्रह्मैवाहमस्मि ॥

ஸரஸ்வதி க்ருஷ்ணவர்ணா | விஷ்ணுரூபா | அஸாவாதி[3]த்யோப்[3]ரஹ்மா | ப்ரஹ்மை வாஹமஸ்மி || (என மாலையிலும் த்யானித்து ஹ்ருதயத்தைத் தொட்டுக்கொள்ளவும் பின்பு ஆசமனம் செய்யவும்.)

---

**மநஸ் ஶுத்தியே உயர்ந்த ஶுத்தியாம்.**

# ஹம்ஸ கீதா.

வேதாந்தப் பகுதி.

[ஸ்ரீமத் பாகவதத்தில் 11வது ஸ்கந்தத்தில் 28 சுலோகமாகவுள்ளது]

ஸ்ரீ கிருஷ்ணன் உத்தவருக்குக் கூறியது: ஹிரண்ய கர்ப்பரின் மாநஸிக புத்ரர்களான ஸநகாதிகள் பிதாவை வணங்கி ஸம்ஸாரத்திலிருந்து விடுபட விரும்பியவன், குணங்களில் பிரவேசித்த மனதையும் மநதில் பிரவே சித்த குணத்தையும் எப்படி விடுவது? என்று கேட்க, அவர் என்னை த்யாநம் செய்தார். நான் ஹம்ஸ ரூபராக வர நீயார்? என எல்லோரும் என்னை வினவினர்.

கிரு: நான் என் ஸ்வரூபத்தைக் காட்டி அவர்களுக்குக் கூறிய ஹம்ஸ கீதையைக் கேள்:- பரமாத்மா ஒரே வஸ்து தான் எங்கும் உளது, என்பதை நீங்கள் அறிந்திருந்தால் நீ யார்? எனக் கேட்கமாட்டீர்கள்! மநஸாலும் வாக்கா லும் த்ருஷ்டியாலும், நான் என்ற ஒரே வஸ்துதான். அதைத் தவிர வேறில்லை என நினையுங்கள்! கூறுங்கள்!! பாருங்கள்!!

குணங்களும், மநதும், ஒவ்வொரு உடலிலும் ஜீவ வடிவனாக இருக்கின்ற என்னுடைய தேஹமே யாம். குணங்களை ஸதா ஸேவிப்பதால் மநம் குணமயமாகிறது. குணங்கள் மநதிலிருந்தே உண்டாகின்றன. குணத்தில் இருந்து மனதின் விருத்திகளான ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி என்பன தோன்றுகின்றன. இவைகளுக்கு மேலாக ஸாக்ஷியாக இருப்பவன் ஜீவன். நான்காவது நிலையிலுள்ள என்னைப் பற்றிக்கொண்டு குணங்களையும் மநதையும் மறக்கவேண்டும். என்னை அறியாமல் குணங் களில் ஈடுபட்டதால் அஹங்காரமும் அதனால் ஸம்ஸார பந்தமும் ஏற்படுகிறது.

யுக்தியாலும் வேதாந்த விசாரத்தாலும் இவ்வுலகம் எல்லாம் ஆத்மாவைத் தவிர வேறல்ல என்று கருத வேண்டும். அந்த க்ஞானம் வராதவரை ஜாக்ரத்வஸ்தை யும் ஸ்வப்நம் போலவே ஆகும். ஆத்மா ஒன்றுதான் எப்போதும் ஸத்தாக உள்ளது. மற்றவை ஸ்வப்நத்தில் கண்டவைபோல் க்ஞாநம் வந்தபின் பொய்யாகும். நீடித்து நிற்காது.

---

**அநுஷ்டாநமுள்ள பெரியோர் சொல்லே க்ஞாநம்.**

ஜாக்ரத் நிலையில் ஜீவன் ஸகல இந்திரியங்களாலும் ஸகல விஷயங்களையும் அநுபவிக்கிறான். அதே ஜீவன். ஸுஷுப்தியில் அதைத் தனக்குள் லயப்படுத்துகிறான். ஸ்வப்நத்தில் அவனே மநதினால் அவைகளைப் பார்க்கிறான். ஆதலால் மூன்று நிலைகளிலும் ஒன்றாக இருப்பவன் ஜீவன் என்ற ஆதமா ஒருவனே. மற்றதெல்லாம் தோற்றமே. உண்மையல்ல.

மூன்று குணங்களாலே மநதில் மூன்றுநிலைகள் எனது மாயையால் உண்டாகின்றன என்ற ஸதுபதேசமெனும் கத்தியால் ஹிருதயத்திலுள்ள ஸகல ஸந்தேஹங்களையும் அறுத்துத் தள்ளு. மூன்று நிலைகள் மநஸில் அக்ஞாநத்தால் தோன்றியவைகள். கொள்ளிக்கட்டை (அலாத சக்ரம்) போல சுற்றுகின்றன. அந்த சக்ரத்திலுள்ள அறிவே பலவகைத் தோற்றங்களுக்குக் காரணமாம். அதே மாயாவிலாஸம் எனப்படும்.

வெளி உலகிலிருந்து மனதைத் திருப்பு! ஆசைகளை அறவே ஒழி! பயனற்ற ஸம்ஸாரஸுகத்தில் ஆசை வைக்காதே! உலகமும் உலக வஸ்துவும் உண்மையானவைகள் அல்ல என நினை! அவைகளை விடு! இறக்கும்வரை இந்த சிந்தையோடிருந்தால் பவப்பிணி உன்னை அணுகாது என்பது ஸத்யம்!

ஸ்வரூபத்தை அறிந்த ஸித்தன் தனது தேஹம் உண்டானாலும், அழிந்தாலும், குடிவெறியிலுள்ளவன் இடுப்பில் உள்ள வேஷ்டி இருந்தாலும் அவிழ்ந்தாலும் அதை அறியாததுபோல் கவனிக்கவே மாட்டான். நாம் முன் செய்த கர்மாவே தற்சமயம் உடல் உண்டாவதற்குக் காரணமாயிருக்கிறது. அந்த கர்ம பலனை அநுபவிக்க கர்மா முடியும்வரை தெய்வாதீநமாக பிராணனுடன் கூடிய தேஹம் இருக்கிறது. அதாவது ஜீவித்திருக்கிறது. ஆத்ம ஸமாதியிலீடுபட்டவன்—வஸ்து தத்வத்தை அறிந்தவன்—தனது உடல் உள்பட ஸமஸ்த பிரபஞ்சத்தையும் ஸ்வப்நம் போலவே கருதுவான்.

முனிவர்களே! இதுவரை அதிரஹஸ்யமான ஸாங்க்யமெனும் க்ஞாநத்தையும் யோகத்தையும் கூறினேன். இது

---

நிவீருத்தி தர்மம் எனப்படும். பிரவிருத்தி தர்மம் எனப் படும் யக்ஞத்தைப்பற்றிக் கேளுங்கள் கூறுகிறேன் :

நானே யக்ஞ ஸ்வரூபீ ! ஸாத்விக கர்மாவினுல் என்னையே ஆராதித்தால் என்னையே அடையலாம். தேஜஸ், யாகம், க்ஞானம், ஸத்யம் ஸ்ரீ, கீர்த்தி, அடக்கம் ஆகியவைகளுக்கு நான் இருப்பிடமானவன். குணமே இல்லாதவனும் ஒன்றையும் அபேக்ஷிக்காதவனுமாய் இருக்கும் பொழுது என்னை எல்லா குணங்களும் வந்து அடைகின்றன. பற்றில்லாமை எங்கும் ஸமமாக இருத்தல் அன்பு முதலியவை எப்போதும் என்னை விடுவதில்லை.

ஸநகாதி முநிவர் இதைக் கேட்டு ஸந்தேஹமில்லாதவர்களாக ஆனார்கள். பக்தியுடன் என்னைப் பூஜித்து உயர்ந்த ஸ்துதிகளால் போற்றினர்.

பிரும்மா முதலிய ஸகலரும் போற்றிப் புகழ்ந்து வணங்க அனைவர்க்கும் ஹம்ஸகீதையை உபதேசித்து நான் என் இருப்பிடம் சென்றேன் என்றார் பகவான்.



## தார்மிகச் செய்திகள்

**பசுபந்தம்:** ஆனிமீ 1௳ திருவாரூரில் பக்ஷிதீர்த்தம் பிரும்மஸ்ரீ சுப்ரமண்ய தீக்ஷிதர் ஷ கர்மா செய்தார். பாம்பே சாஸ்த்ர ரத்நாகரம் ஸ்ரீ தீக்ஷித்ஜி ஸ்ரீ அத்வர்யுவாக இருந்தார். வைதிக தர்மவர்த்தநீ ஆசிரியரும் சிஷ்யன் ஸ்ரீ சுப்ரமண்யமும் பேருதவி புரிய மணியம் ஸ்ரீ நடராஜய்யரும் கோவில் பாபுகுருக்களும் அருகிலிருந்து செவ்வனே நடத்திவைத்தனர். நகை வியாபாரம் ஸ்ரீ N. ராமநாதன் உதவி மெச்சத்தக்கது.

**ஆயுஷ்காமேஷ்டி:** வேதபாஷ்ய புராண ஸபை கார்யதர்சி ஸ்ரீ குமாரஸ்வாமி அய்யரும் ஜ்வல்லர் ஸ்ரீராமச்சந்த்ர ஐயரும் குண்டலம் செய்தளிக்க நம் ஆசிரியர் முன்நின்று ஷ தீக்ஷதருக்கு ஸ்ரீ சங்கரமடத்தில் அதை நன்கு நடத்தி வைத்தார்.

**முயற்சி பலிக்குமா?** அவுரங்கசீப் காலத்தில் காசி விச்வநாதஸ்வாமி கோவிலை இடித்து மசூதி கட்டினர். இப்போதுள்ள விச்வநாதஸ்வாமிகோவில் அப்போதுள்ள ஆஸ்திகரால் அமைக்கப்பட்டது. இஃதும் ஆசாரம் குன்றிவிட்டபடியால் பூஜ்ய ஸ்ரீ கரபாத்ர ஸ்வாமிகளால் வேறிடத்தில் ஷ ஆலயம் அமைக்கப்பட்டது. மசூதி உள்ளவிடத்தில் விச்வநாத ஸ்வாமியை ப்ரதிஷ்டை செய்ய ஹிந்து மஹாஸபை பகீரத ப்ரயத்நம் செய்கிறது. பலர் சிறை சென்றனர்—செல்கின்றனர்—விச்வநாதன் திருவுள்ளமெப்படியோ !

---

**ஸம்ஸாரம் ஸாரமில்லை என ஸதா நினை.**

**பண்டித ஸங்மானம்:** கலவை பிருந்தாவந ட்ரஸ்ட் தலைவர் சாத்தூர் ஜமீன் ராவ்ஸாஹிப் ஸ்ரீ S. R. கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்கள் புத்ரன் விவாஹம் 4 நாள் நடத்தி இரண்டாவதுநாள் மாலை தம்பதிகளுக்கு விவாஹ மந்த்ரார்த்தம் கூறி ஆசீர்வதிக்கும்படி பிரபல பண்டிதர்களை அழைத்தார். 30 பண்டிதர்களுக்குமேல் ரொக்கமும் வேஷ்டியும் பக்திபுரஸ்ஸரமாக அளித்தார்.

**ஆமோதநம்:** சாஸ்த்ர ரத்நாகரம் பாம்பே சங்கரமடம் தலைவர் ஸ்ரீ தீக்ஷித்ஜி எனும் வெங்கடேச தீக்ஷிதர், சென்னை ஸ்ரீ சங்கர மடத்தில் நம் ஆசிரியர்செய்துவரும் கைங்கர்யத்தை ஆமோதித்து ஒருஉபன்யாஸம்செய்தார்.

**வில்லிவாக்கம் ஸ்ரீ நடேசய்யர்** பெண் கல்யாணத்தை 25—6—59ல் வைதிக முறையில் மிக்க சிறப்பாக நடத்தினர். பண்டித, வைதிக ஸம்பாவனை, ஸ்ரீ மடத்து சிப்பந்திகள் ஸம்பாவனை, பிராம்மணோதாருக்குத் தனி சாப்பாடு முதலிய ஏற்பாடு செய்திருந்தார். ஸாதுக்கள் ஸ்ரீ பரமாசாரியாள் அனைவரும் ஆசீர்வதித்தனர்.

## ஆடிமாத விசேஷம்.

தக்ஷிணாயந ஆரம்பம். தை வரை தேவர்க்கு இரவு காலம். உபநயன விவாஹாதிகள் செய்யக்கூடாது.

4உ வியாஸ பௌர்ணமி, ஆகாமாவை ஸ்நாநம். வேதவ்யாஸர் அவதரித்த புண்ய நாள். அவர் சரிதம் பூஜை படம் விரும்புவோர் 20 நயா பைசா ஸ்டாம்பநுப்பி குருகுலத்திலிருந்து பெறலாம். 25 காபிகளே உள.

24உ கருடபஞ்சமி, நாகபஞ்சமி. மிகச் சிலரே ஷை பூஜை செய்வதால் அந்த பூஜா கல்பம் எழுதவில்லை.

24உ ரிக்வேத, ஸாமவேத உபாகர்மா.

29உ வரலக்ஷ்மீ பூஜை. (33 ந.பை. ஸ்டாம்பனுப்பி குருகுலத்தில் ஷை பூஜை புத்தகம் பெறலாம்.)

30உ பவித்ரோத்ஸவம். ஓராண்டு பூஜை செய்த பலனைப்பெற ஷை உத்ஸவம். கூறிய கணக்குப்படி நூல்களை ஸ்வாமிமீது சாத்தி பிறகு பக்தர் தரிப்பது. பெரும்பாலும் விஷ்ணு ஆலயங்களில் நடக்கும். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் நடக்கின்றது.

ஆடி மாதம் 30 நாளும் கரி காய் பழங்களை விலக்குவது மஹாக விரதம். மத்வரில் பலரும் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளும் இதை அநுஷ்டிக்கின்றனர்.

ஆடி மாதம் முதல் மூன்றுநாள் நதிகள் பஹிஷ்டையாகும் காலம். அப்போது நதிகளில் ஸ்நாநம் செய்யக் கூடாது. ஆனால் நேரே ஸமுத்ர ஸங்கமமாகும் மஹாநதிகளில் செய்யலாம்.

---

**தனக்கும் பிறர்க்கும் உழைப்பவனே சிறந்தவன்.**

# சாந்தி விலாஸம்.

( ஸ்ரீ கணபதி தீக்ஷிதர். )

36. स्वेनैवोक्तं निगमवचसा बोधनीयास्तु जीवा
जीवैरेवेत्यपिच मुनिभिः कारितं धर्मशास्त्रम्।
उत्पश्यन्तु स्वयमिति भवोदारुण श्चाल्यतेसौ
अद्यापिस्मो यदिखलुजडाः किंविधत्तां शिवोऽपि॥

ஸ்வேனைவோக்தம் நிக[3]மவசஸா போ[3]த[4]நீயாஸ்துஜீவா
ஜீவைரேவேத்யபிசமுநிபி[4]: காரிதம் த[4]ர்மஶாஸ்த்ரம்।
உத்பஶ்யந்து ஸ்வயமிதிப[4]வோ த[3]ருணஶ்சால்யதேஸௌ
அத்[3]யாபிஸ்மோயதி[3]க[2]லுஜட[3]ா: கிம்விதத்தாம்ஶிவோ ऽபி.

பகவான் ஜீவராசிகள் நன்மை பெற தானே வேதவாக்கினால் தர்மங்களை அறிவித்தார். அதை அறியமுடியாதவர்களுக்கு மஹார்ஷிகளைக்கொண்டும் தர்மசாஸ்த்ர மூலமாக நல்வழிகளை அறிவித்தார். தானே ஊஹித்து அறியட்டுமென கடுமையான ஜநநமரணங்களைத் தந்தார். அதிலிருந்தும் அறிவுபெறாமல் ஜடராக இருந்தால் அவர்தான் என்னசெய்வார்?

37. येनाचान्ताः सलिलनिधयो येन सृष्टाप्रतिद्यौः
शास्त्राण्यस्त्राण्यपि कबलितान्येकया यस्ययष्ट्या।
कस्तादक्षः प्रभवतु जनोदेव भूदेव वर्गे
कालः कीटानिव कबलयामास तानप्ययत्नम्॥

யேநாசாந்தா: ஸலிலநித[4]யோயே நஸ்ருஷ்டாப்ரதித்[3]யௌ:
ஶாஸ்த்ராண்யஸ்த்ராண்யபி கபலிதாந்யேகயாயஸ்யயஷ்ட்யா
கஸ்தாத்[3]ருக்ஷ: ப்ரப[4]வதுஜநோ தே[3]வபூ[4]தே[3]வவர்கே
கால: கீடாநிவகப[3]ல யாமாஸதாநப்ய யத்நம்॥

ஸமுத்ரத்தை விழுங்கிய அகஸ்த்யரையும் வேறு ஸ்வர்க்கத்தைப் படைத்த விச்வாமித்ரரையும் அஸ்த்ர ஶஸ்த்ரங்களை ப்ரும்ம தண்டத்தினால் பக்ஷித்த வஸிஷ்டரையும் காலம் என்பது ஒரு புழுவைப் பக்ஷிப்பதுபோல் சாப்பிட்டுவிட்டது. இவர்களுக்கு

---

ஸமானம் வேறு யாருண்டு? இவர்களையே பக்ஷித்த காலனுக்கு நாம் எவ்வளவு?

38. कायस्थैर्यं करणपटुतां बन्धुसम्पत्तिमर्थं
चातुर्यं वा किमिवहि बलं बिभ्रतोनिर्भराः स्मः ।
अन्त्यश्वासः किमयमथ वोपान्त्य इत्यामृशन्तः
विस्मृत्येशं निमिषमपि किं वर्तितुं पारयामः

காயஸ்தைர்யம் கரணபடுதாம் பந்துஸம்பத்திமர்த்தம்
சாதுர்யம்வா கிமிவஹிபலம் பிப்ரதோ நிர்பராஸ்ஸ்ம: ।
அந்த்யஶ்வாஸ: கிமயமதவோபாந்த்ய இத்யாம்ருஶந்த:
விஸ்ம்ருத்யேஶம் நிமிஷமபிகிம் வர்திதும் பாரயாம: ॥

உடல் கெட்டியாக இருக்கிறது. புலன்களெல்லாம் நன்றாக இருக்கின்றன பந்துக்கள் நிறைய இருக்கின்றனர். செல்வமும் நிறைந்திருக்கிறது. ஸாமர்த்யம் அதிகம் என இந்த பலத்தை நினைத்துக் கவலையின்றி இருக்கிறோமே. இப்போது விடும் மூச்சு கடைசி மூச்சா? அதற்கு முந்தியதா என்று யோசித்தால் ஒரு நிமிஷமேனும் சிவனை மறக்கமுடியுமா?

39. अभ्यस्यादौ श्रुतिमथगृहं प्राप्य लब्ध्वामहार्थां
निष्ट्वायज्ञैर्जनित तनयः प्रव्रजेदायुषोऽन्ते ।
इत्याचष्टे यइहसमनु र्याज्ञवल्क्योऽपि वा मे
तावत्कालं प्रतिभवति चेदायुषः तत्प्रमाणम् ॥

அப்யஸ்யாதௌ ஶ்ருதிமதக்ருஹம் ப்ராப்ய லப்த்வா மஹார்த்தா
நிஷ்ட்வாயக்ஞைர்ஜநித தநய: ப்ரவ்ரஜேதாயுஷோऽந்தே ।
இத்யாசஷ்டேய இஹஸமனுர்யாக்ஞவல்க்யோऽபிவாமே
தாவத்காலம் ப்ரதிபவதிசேதாயுஷ: தத்ப்ரமாணம் ॥

வேதமோதி பத்னியை மணந்து புத்ரனைப் பெற்று வேள்விகளைச் செய்து ஆயுஸின் முடிவில் ஸன்யாஸம் செய்துகொள் என்று கூறும் மனுவும், யாக்ஞவல்க்யரும் அதுவரை நாமிருப்போமென உறுதிகூற முடியுமா? இப்போதே நல்லதைச் செய். வேதாந்த விசாரம் செய்.

---

**எதிலும் ஆசை, பற்று வைக்காதே.**

# ஸ்ரீ ராமாவதாரம்.

தியாகோப
நிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ணசாஸ்த்ரி.

ஸ்ரீ ராமாவதாரம் விஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்று என நாம் அறிவோம். மற்றும், ஸ்ரீ ராமன் சிவஸ்வரூபி, என்பவரும்; ஸ்ரீ ராமனாக ஈச்வரியும், ஸீதையாக ஈச்வரனும் வந்துதித்தனர் என்பவரும் உண்டு. இன்னும் 'ராம' தாரக மந்த்ர ஸ்வரூபி இவரே என்று ஜபிப்பவரும், ராமனை உத்தம மனுஷ்யனாகக் கொண்டாடுபவரும், பற்பலவிதமாக ஸ்ரீ ராமபக்தியை வளர்க்கின்றனர். இங்கு ஒரு ஸாது ராமபக்தியில் திளைத்தவர் 'ராமா! நீ யார்?' என்று ராமனையே கேட்டு அதற்கு விடையும் அவன் முன்னிலையில் ஸமர்ப்பித்தார்.

ராகம்: தர்பார்] பல்லவி [த்ரிபுடதாளம்

எந்துண்டி வெடலிதிவோ
ஏ ஊரோ நே தெலிய, இபுடைன தெலுபவைய ஸ்ரீ ராம (எங்)

அநுபல்லவி

அந்த சந்தமு வேறே நடதலெல்ல த்ரிகு
ணாதீ தமை யுன்னதே கானி ஸ்ரீ ராமா நீவு (எங்)

பொருள் — ஸ்ரீ ராம! நீ எங்கிருந்து வந்தாயோ? உனக்கு எந்த ஊரோ? எனக்குத் தெரியவில்லை. இப்பொழுதாவது தெரிவிக்கவேண்டும் ஐயா!

சிருங்காரம் நிறைந்த உன் அழகு ஒரு பக்கம் இருக்கட்டும். உன் காரியங்களைக் கவனிக்கும்பொழுது அவைகளெல்லாம் மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டதாக இருக்கிறதே! (அதனால் நீர் யார்? எந்த ஊர்? என்று தெரியவில்லை.)

சரணம்

1. சிடுகண்டென பராத சய முல தகிலிஞ்சே
சிவலோக மு காது

ஆனால், ஸாதுஸங்கத்தில் ஆசை வை.

2. வடுரூபுடை பலினி வஞ்சிஞ்சி யணத் ஸு²வானி
வைகுண்ட மு காது

3. விடவசன முலாடி சிரமு த்ரும்ப பட்ட
விதிலோக மு காது

4. திடவு தர்மமு ஸத்யமு ம்ருது பாஷலு கல்கு
திவ்யரூப த்யாக ராஜநுத நீவு (எந்)

**பொருள்—1.** ஒரு சிறு பொழுதுக்குள் அபராதங்கள் வந்துவிடுமோ என்று பயப்படும் சிவலோகத்தைச் சேர்ந்தவரல்ல.

2. மாணவ வடிவத்தில் (வாமனனுகை வந்து) மஹா பலியை ஏமாற்றி அடக்கிய விஷ்ணு வஸிக்கும் வைகுண்டமும் உம்மிருப்பிடம் அல்ல.

3. பொய் சொல்லி தலே அறுபட்ட ப்ரும்மா வஸிக்கும் ஸத்ய லோகமும் (நிச்சயமாக) உம்மிருப்பிடமில்லே. [அபராதம் பண்ணினவர்களுக்கு மன்னிப்பே அளித்திருக்கிருய். அதை நினைக்கவும் மாட்டாய். உபகாரமே செய்திருக்கிருய். ஏமாற்றுகிற பேச்சு உன்னிடம் காணவில்லே. ஒரே சொல், ஒரே பாணம், ஒரே பத்னி, கபடநாடகம் உனக்குத் தெரியாது. (ஸத்யமே உருவான உன் உறுதிமொழிகளே) உன் தம்பி பரதனுக்கு சித்ர கூடத்தில் நீர் செய்த உபதேசம் கேட்டுளேன்.]

4. தைர்யம், தர்மம், ஸத்யம், இனிய பேச்சு இவைகளெல்லாம் திவ்ய ரூபத்துடன் ராமனென்று வந்தது என்கிறேன். சரிதானு ! தெரிவிக்கவேண்டும் ஐயா !

**கருத்து** — முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட, மும்மூர்த்திகளுக்கும் மேலான, ப்ரப்ரும்மமே, தர்மம், ஸத்யம் இவைகளேக் கடைபிடித்துக் காட்ட, தைர்யம், வீர்யம், சௌர்யம், கருணே இவைகளுடன் மதுரமான மொழி பயிலும் இயல்புடன் அழகு நிறைந்த வடிவமுடன் தனிப் பெருமைகொண்ட 'ராமன்' என்று தேன் இனிக்கும் பெயருடன் அவதரித்ததாம்.

---

**ஆசை ஸம்ஸார பீஜம், ஸத்ஸங்கம் முத்தி விதை.**

# குமதி ஸுமதி ஸம்வாதம்.

மாதர் பகுதி.

குமதி: அடி ஸுமதி! எப்போ பாத்தாலும் வீடுவீடு என்று வீட்டைக்கட்டி அழுதுகொண்டிருக்கிறாயே! காலே வீசிக் கொண்டு வெளியில் சத்தே போவோம் வா!

ஸுமதி: நன்றாய் சொன்னாய்! நமக்கு வீடுதானே முக்யம்! நமது பெயரே வீட்டுக்காரி தானே?

கு: ஆஹா! அதெல்லாம் அலங்காரப் பேச்சுதான்! நமது மதத்திலே நமக்குத்தான் ஸ்வாதந்த்ரியம் கிடையாதே!

ஸு: தெரிந்து சொல்கிறாயா? தெரியாமல் சொல்கிறாயா? லோகத்திலே யாருக்குத்தான் ஸ்வாதந்த்ரியமிருக்கிறது? ஈச்வரன் ஒருவனே ஸ்வதந்த்ரன்! ஜீவனான ஆண் பெண் அனைவரும் பரதந்த்ரரே!

கு: நான் ஒன்று கேட்டால், நீ பெரிய வேதாந்தம் ஆரம்பித்து விட்டாயே! புருஷாள், அவாள் இஷ்டப்படி வெளியில் வாசலில் போகிறார்கள். ஒரு ஸினிமா, பந்தாட்டம், சீட்டாட்டம், ஒரு மீடிங் முதலியவைகளுக்குப் போகிறார்களே! நமக்கு அப்படி முடிகிறதா? வீட்டைக் காக்கும் பிசாசாக இங்கேயே அடஞ்சு கிடக்குறோமே?

ஸு: ஓஹோ! இக்கால நாகரிகமெனும் அநாகரிகத்தை அநாசாரத்தை ஒட்டி நீ பேசுகிறாயோ? அது எனக்குப் புரியவில்லை! இருக்கட்டும், எல்லா புருஷாளும் என்றைக்குமே அப்படிச் செல்வார்களா? ஆஸ்திகராக உள்ளவர் ஆபீஸ் வேலை முடிந்தவுடன் வீடுவந்து சரீர சுத்தி, அநுஷ்டானம் செய்து நம்மையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு கோவில் கதை முதலியவற்றிற்குச் செல்வார்களே!

கு: நித்யம் உள்ள கோவில்தான்! நித்யம் நடக்கும் ராமாயணந்தானே! மாதர் கிளப்பு, ஸினிமா, மீடிங்க், கச்சேரி முதலியவைகளுக்குப் போனால் கலகலவென நாலு பேருடன் பேசலாம். பல புதிய விஷயங்களை அறியலாம். உலக ஸமாசாரம் நன்கு தெரியும். நல்ல பொழுது போக்காகுமே!

ஸு: நாலு பேருடன் என்ன பேசலாம்? ஊர் வம்புதானே? நீலகண்டதீக்ஷிதர் எனும் பெரியவாள் கூறியதுபோல் எந்த

ஊர் எப்படி இருந்தாலென்ன ? நாம் நிச்சயமாக போகும் ஊரைப்பற்றி தெரிந்துகொள்ள வேண்டாமா ?

கு : அதற்கென்ன அவஸரம் ? காடு வா ! வா !! வீடு போ ! போ !! என்கிறதா ? எல்லாம் ஆய்ந்து ஓய்ந்து அடங்கிப் பாட்டியாக போனபிறகு இருக்கவே இருக்கு கதை !

ஸா : நன்றாகச் சொன்னாய் ! அதுவரை நாம் இருக்கப்போகிறோமென்பது என்ன நிச்சயம் ? அடுத்த க்ஷணம் இருப்பதே நிச்சயமில்லையே ! "பின் வயதில் செய்யவேண்டியதை இப்போதே செய் !" நாளை வேலையை இன்றே செய். நீ செய்து முடித்து வரும்வரை யமன் காத்திருப்பானா ? காற்றுள்ளபோதே தூற்றிக் கொள் ! எனக் கேட்டது இல்லையா ? பெரியோர் சொல்லை !

கு : நான் என்ன சொன்னாலும் அதை மறுத்துப் பேசுவது என்றே ஸங்கல்பம் செய்துகொண்டாய்போலிருக்கிறது.

ஸா : அப்படி ஒன்றுமில்லை! யுக்தியுள்ளதாயிருந்தால் குழந்தை கூறினாலும் கிளிப்பிள்ளை கூறினாலும் நான் கேட்கத் தயார்! அநாகரிக விஷயங்கள் எனக்குப் பிடிக்காதம்மா ! கோபித்துக் கொள்ளாதே.

கு : பேஷ் ! நீ பத்தாம் பசலியில் இருந்திருக்க வேண்டும்' நமது தேச பண்பாட்டைக் காக்க பெண்கள் பெரும் பங்கு எடுத்துக்கொள்கின்றனர். அன்யதேச அம்பாஸிடர் ஒரு பெண் ! தேசிய ஸபை தலைவி ஒரு பெண் ! காரியதரிசி ஒரு பெண் ! வக்கீல் பெண் ! நீதிபதி பெண் ! சட்ட சபை மெம்பர் ஒரு பெண் ! மேயர் பெண் ! உத்யோகங்களில் பலர் பெண்கள் ! அவர்கள் நாட்டுக்கு நலம் புரிவதைக் கவனித்தாயா ?

ஸா : போதும் ! போதும் !! நிறுத்து. என்ன பாக்யம் ! என்ன பாக்யம் !! இவ்வளவு முன்னேறி என்ன ? சோத்துப் பஞ்சம், துணிப் பஞ்சம், ஜாதிச் சண்டை, பாஷைச் சண்டை, கத்திக் குத்து, கொலை, கொள்ளை, துரோஹம், துப்பாக்கிப் பிரயோகம், அடிதடி முதலியன நாளுக்கு நாள் ஆஞ்ஜநேயர் வால்போல் வளர்ந்துகொண்டே போகிறது ! நல்ல நாட்டு நலம் !! நாம் வராததுதான் குறை ?

---

**ஒரு நிமிஷங்கூட சோம்பலாய் இராதே.**

கு: ஒரு தேசம் முன்னேறும் போது சில தடைகள் இருக்கத் தான் இருக்கும். அவைகளைப் பொறுத்தே முன்னேற வேண்டும்.

ஸா: முன்னேறுவதாகத் தெரியவில்லையே! பின்னால் அல்லவா செல்கிறது! விரதங்கெட்டால் ஸுகமாவது வேண்டும். இஹ லோகமுமில்லை! பர லோகமும் இல்லை! என்ன முன்னேற்றம் வேண்டியிருக்கிறது?

கு: நீ, கிணற்றுத் தவளைபோல் மற்ற உலகப்போக்கை அறியாமல் விசாலமான நோக்கமின்றி பேசுகிறாய்! உன்னோடு பேசுவது கஷ்டம் அம்மா!

ஸா: நான் எல்லாவற்றையும் அறிந்து ரொம்ப ரொம்ப விசால நோக்கத்துடன் இருந்து பேசிப் பார்த்துதான் இந்த முடிவிற்கு வந்திருக்கிறேன். ஒன்றும் தெரியாமல் பேசவில்லை! தெரியுமா?

கு: ஆனால் உன் முடிவுதான் என்ன கூறு கேட்போம்.

ஸா: பெண் வர்க்கம் டிக்ரி பெறும் படிப்புகளைப் படிக்கக் கூடாது. அதிலும் ஆண்பிள்ளைகளுடன் சேர்ந்து படிக்கலாகாது. உத்யோகம் மீடிங்க் போகக்கூடாது.

கு: பட்டப் படிப்பு படித்தா லென்ன? ஆகாசம் இடிந்து விழுமா? அதனால் வரும் தீமை என்ன?

ஸா: ஒன்றா இரண்டா சொல்ல? எல்லாம் தீங்கே! கேள்!! பி. ஏ. படித்தவள் எம். ஏ. புருஷனைத்தான் தேடுவாள் அல்லவா?

கு: அது நியாயந்தானே? பி. ஏ. பெண் எஸ். எஸ். எல். ஸி. பதியை எப்படி மணப்பள்? வரன் என்றால் உயர்ந்தது என்றுதானே பொருள்!

ஸா: வாஸ்தவம்! வெறும் ஆண்பிள்ளைக்கே வரதக்ஷிணை ஆயிரம் ரூபாய்! மேலே டிக்ரி ஏற ஏற பணமும் ஏறிக் கொண்டே போகிறது! படிப்பிற்கே சிறுகச்சிறுக ஆயிரம் செலவு செய்த தந்தை வரனுக்கு 3, 4 ஆயிரம் தரவேண்டுமல்லவா?

---

**ஸங்கல்பத்தால் ஆசை உண்டாகிறது.**

கு : அது நமது ஸமூஹத்திற்கே ஏற்பட்ட தீமை! அதற்காக படிக்கவேண்டாம் என்கிருயா ?

ஸா : படித்தபெண் வேலைக்குப் போகாமலிருந்தாலும் கஷ்டம். வேலைக்குப் போனலும் அதைவிட கஷ்டம் !

கு : வேலைக்குப் போகாவிட்டால் என்ன கஷ்டம் ?

ஸா : இவ்வளவு ரூபாய் செலவுசெய்து புத்தியை செலவழித்து உடலைக் கெடுத்துக்கொண்டு அடுப்பு ஊதத்தானே நேர்ந்தது என வருத்தமில்லையா ? படித்த காலத்தில் கற்றுக் கொண்ட அநாகரீகமான உடைப் பழக்க வழக்கம் இவைகளை விடவும் முடியாது! பூர்ணமாக அநுஷ்டிக்கவும் முடியாது !

கு : இது ஒரு கஷ்டமா? இருக்கட்டும் உத்தியோகத்தால் என்ன கஷ்டம் வரும் ? என்கிருய்.

ஸா : உத்யோகம் என்பது சொல் அளவில் அழகான சொல் தான் ! ஆனல், ஒருவருக்கு அடங்கி ஒடுங்கி உடலையும் மூளையையும் உழைத்து கூலிவேலை செய்வதுதானே அது? (1) இங்கு பெற்றோருக்கும் பதிக்கும் அடங்க விருப்பமில்லாதவர் உத்யோகத்தில் அன்ய புருஷருக்கு அடங்கித் தானே வேலை செய்யவேண்டும் ? அங்கு ஸ்வாதந்த்ரியம் உண்டா ? நம் வீட்டில் செய்வது வேலை, ஆபீஸில் செய்வது கூலி வேலைதானே ? (2) வேளையில் வீட்டுச்சாப்பாடு கிடைக்குமா? ஆபீஸுக்கு நாழி ஆய்விட்டதென அவஸர அவஸரமாக உண்ணவேண்டும்! ஓடவேண்டும்! வண்டிக்கு நிற்கவேண்டும் ! அங்கு பல புருஷர்களுடன் பல விஷயம் பேசவேண்டும் ! பழக்கத்தால் ஆபீஸ் ஸம்மந்தமில்லாத பல பேச்சுகளையும் பேசவேண்டி வரும் ! (3) மாதா மாதம் விலகவேண்டிய 3 நாட்களுக்கு அங்கு லீவு கிடைக்குமா ? வருஷத்திற்கே 15 நாள்தான் லீவு! 36 நாள் லீவு எப்படி? அங்கு தீட்டைக் கலந்து குளிர்விட்டு அது ஸஹஜமான பின் வீட்டிலும் அப்படியே பழகவேண்டி வரும்! (4) அக் காலத்தில் வேலை செய்வதால் ஆரோக்யம் கெடும் ! வரும் ஸந்ததிகள் பலஹீனமாகப் பிறக்கும் ! (5) பதிக்கு ஓர் ஆபீஸ் ! மனைவிக்கு ஓர் ஆபீஸ் ! இரு ஆபீஸ் நேரமும்

---

வெவ்வேருகும்! வெளியூர்களிலும் தனித்தனியாக இருக்கவும் நேரும். ஒரே ஊரில் ஒரே ஆபீஸில் வேலைகிடைக்க பகீரத ப்ரயத்நம்செய்யவேண்டிவரும்! (6) வீட்டில் சமயல் செய்ய ஒருவர் வேண்டும்! குழந்தைகளேயும், வீட்டையும் கவனிப்பது யார்? இருவருக்கும் சம்பளம் வந்தாலும் செலவும் அதிகமாகுமல்லவா? புருஷனைவிட்டு எவ்வளவு நாள் வெளியூரில் வஸிப்பது? பிரமோஷனுக்கு மேல் அதிகாரியை ஸந்தோஷப்படுத்த வேண்டுமே! வேலை ஒழுங்காகச் செய்தாலுங் கூட தன்னை அடிக்கடி வந்து காணவில்லை! பேசவில்லை! ஸலாம் போடவில்லை! கைக்குலுக்கவில்லை! என மேலதிகாரிகள் பிரமோஷனுக்கு சரியானபடி சிபார்சும் செய்வதில்லை! போதுமா?

---

# ஆடி மாத கோசாரப் பலன். ஜோதிஷப் பகுதி.

**ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி,** பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

### மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

இம் மாதம் பூராவும் குரு ஸப்தமத்திலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலுமிருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். அதனால் செய்காரியங்கள் எதுவும் தடைப்பட்டுக் கூடிவரும். சுபகாரியங்களில் முயற்சிகள் ஏற்படும். வெளியூர் பிரயாணம் போய்வர நேரிடும். சிலர் சிலபொருள் விற்பதற்கான ஏற்பாடுகள் உண்டாகும். புண்ணிய காரியங்களில் சிலவு செய்யும்படியாகும். பிரதி சனி வாரத்திலும் ஒருவர்க்கு அன்னம் போடுவது விசேஷமாம்.

### ரிஷப ராசி

கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஆறிலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனுல் பிரயத்தனங்கள் கூடிவராமல் தடைப்படும். வீண் வகையில் செலவுசெய்ய நேரிடும். ஆரோக்ய வகையில் சிறிது சிலவு செய்யும்படியாகும். பந்துக்களால் கவலை உண்டாகும். குடும்ப நடப்பில் சிலருக்கு கவலையும் நச்சரிப்பும் உண்டாகும். பிரதி வாரமும் சனிக்கு அஷ்டோத்திர அர்ச்சனை செய்து வருவது நன்மையாம்.

### மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய

குரு பஞ்சமத்திலும், சனி ஏழிலும், கேது பத்திலும், ராகு நான்கிலும் இருக்கிறார்கள். சூரியன் தனத்திலிருக்கிறார். இதனுல் அரசாங்க காரியங்கள்

---

சிலருக்கு நன்மையாய் கூடிவரும். செய்காரியங்களில் அலைச்சலும் நிம்மதிக் குறைவும் ஏற்படும். தொழில் ஓரளவுக்கு விர்த்தியாகும். சிலருக்கு வெளியூர் பிரயாணம் ஏற்படும். வரவேண்டிய பணம் தடைப்பட்டு கூடிவரும். விஷ்ணு ஜபம் செய்துவருவதால் கவலை நீங்கும்.

## கடக ராசி

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு நான்கிலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலு மிருக்கிறார்கள். சூரியன் ராசியில் இருக்கிறார். இதனால் சிலருடன் விரோதப் பட நேரும். துணிச்சல் ஏற்படும். பிறர் காரியங்களில் தலையிடுவதால் நன்மை உண்டாகும். குடும்ப நடப்பில் சௌகர்யம் ஏற்படும். சிநேக ஆதரவு உண்டாகும். ஞாயிற்றுக்கிழமையில் ஒரு ஆழாக்கு பசுவின்பால் பாம்பின் புற்றில் விட்டுவருவது மேன்மையாகும்.

## சிம்ம ராசி

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி பஞ்சமத்திலும், ராகு குடும்பத்திலும், கேது அஷ்டமத்திலுமிருக்கிறார்கள். சூரியன் விரையத்திலிருக்கிறார். இதனாலிதன் நடப்பில் முடை ஏற்படும். வரவேண்டிய பணம் தடைப்படும். பிறர் உதவியை எதிர் பார்க்கும்படியாகும். புத்திராதிகளுக்குத் தேகசுகம் ஓரளவு பாதிக்கும். பந்துக்களால் கவலையுண்டாகும். செய்தொழிலில் சோர்வும் ஏற்படுவதாகும். சூரிய நமஸ்காரம் அல்லது ஆதித்ய ஹிருதய பாராயணம் செய்துவருவது நலம்.

## கன்னியா ராசி

உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு குடும்பத்திலும், சனி சுகத்திலும், ராகு ராசியிலும், கேது சப்தமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்திலிருக்கிறார். இதனால் அலைச்சல் காரியங்களில் ஈடுபடும்படியாகும். வருமானம் வந்தும் மனதிற்கு நிம்மதி இராது. ராஜாங்க காரியங்கள் சிலருக்குக் கூடிவரும். அடிமை யாட்களால் கவலையும் வருத்தமும் ஏற்படும். சில பொருள் விற்கும்படி நேரிடும். வெளியூர் போய்வரவும் நேரும். ருத்திராபிஷேகம் செய்வதால் மனதுக்கு சாந்தி ஏற்படும்.

## துலா ராசி

சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு ராசியிலும், சனி மூன்றிலும், கேது ஆறிலும், ராகு விரையத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பத்திலிருக்கிறார். இதனால் முக்கிய பிரயத்தினங்கள் கைகூடி வரும். வெளியூரிலிருந்து அனுகூல சேதி கேள்விப்பட நேரும். எதிலும் ஊக்கமும் தைரியமும் ஏற்படும். பழய வரவுகளில் திருப்தி ஏற்படும். சிலருக்கு பதவி மாற்றம் உண்டாகும். குடும்ப சுகம் ஏற்படும் விஷ்ணு சஹஸ்திரநாமம் பாராயணம் செய்ய நன்மையாம்.

## விருச்சிக ராசி

விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு விரயத்திலும், சனி குடும்பத்திலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பாக்கியத்தி லிருக்கிறார். இதனால் குடும்ப

---

**ஆறும் க்ஞான சத்ருக்கள். திருடர்கள்!**

சிலவுகள் அதிகரிக்கும். குடும்பத்தில் சில சச்சரவுகள் ஏற்பட்டு விலகும். சுப காரியங்களில் சிலவுசெய்யும்படி யாகும். பிறர் ஸஹாயம் ஏற்படும். வைத்ய வகையில் சிறிது சிலவுசெய்ய நேரிடும். நவக்கிரகபிரதக்ஷணம் செய்வது நலம்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி ராசியிலும், கேது சுகத்திலும், ராகு ஜீவனத்திலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறார். இதனால் ராஜாங்க மூலமாய் கவலை ஏற்பட்டு நீங்கும். ஆரோக்ய விஷயமாய் சிறிது சிலவுசெய்ய நேரும். சிலபொருள் வாங்க நேரிடும். செய்காரியங்களில் அலைச்சலின்பேரில் ஆதாயம் ஏற்படும். பந்துக்களால் கிலேசம் ஏற்படும். புதிய சிந்தனைகள் ஏற்படுவதாகும். துர்க்கா தேவிக்கு அர்ச்சனை செய்வதுடன் சுப்ரமண்யருக்கு ப்ரீதிசெய்வது நன்மையாம்.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு ஜீவனத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்யத்திலும், கேது மூன்றிலும் இருக்கிறார்கள். சூரியன் ஸப்தமத்திலிருக்கிறார். இதனால் எந்த முயற்சிகளும் தடைபடுவதுடன் தன நடப்பில் கவலையும் ஏற்படும். கொடுக்கல் வகையில் நிற்பந்தம் உண்டாகும். சிலபொருள் விற்கும்படி யாகும். பந்து ஸ்நேகிதர்களால் கவலை ஏற்படும். முக்கியஸ்தர்களுடன் விரோதப்படும்படியாகும். வெளியூர் பிரயாணம் போய்வர நேரிடும். மஹா கணபதிக்கு அபிஷேக ஆராதனை செய்வது நன்மையாகும்.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு பாக்யத்திலும், சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது தனத்திலும் இருக்கிறார்கள். சூரியன் ஆறிலிருக்கிறார். இதனால் செய்தொழிலில் வருமானம் ஏற்பட்டுவந்தாலும் சுபவிஷயமாயும், புண்ணிய காரியங்களிலும் சிலவு செய்யும்படியாகும். சிலருக்கு குடும்ப கவலை ஏற்படும். ஓரளவு தேகசுகம் பாதித்துக் குணமாகும். தன் சொல்லே தனக்கு விரோதமாகும். பெரிய மனுஷர்களின் ஸ்நேகமும் ஆதரவும் ஏற்படும். வெளியூர் பிரயாணம் ஏற்படுவதாகும். ருத்திர ஜபம் செய்துவருவது நன்மை யாகும்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு அஷ்டமத்திலும், சனி ஜீவனத்திலும், ராகு ஸப்தமத்திலும் கேது ராசியிலுமிருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால் ராஜாங்க மூலமாய் எதிர்பார்த்த காரியங்கள் தடைப்பட்டு கூடிவரும். செய்தொழிலில் சிறிது சிறிதாக நன்மைஏற்படும். சிலபொருள் விற்பனையாவதன்மூலம் திருப்தி ஏற்படும். பெரிய மனுஷ்யர்களின் ஆதரவு ஏற்படும். குடும்ப நடப்பில் சௌகர்யம் ஏற்படுவதாகும். லலிதா ஸ்தோத்திரம் பிரதி வெள்ளிக்கிழமையிலும் செய்வது அவஸ்யமாகும்.

---

**பெண்ணும் பொன்னும் மயக்க வஸ்து.**

## புஸ்தக அறிமுகம்.

**யஜுர்வேத உபாகர்ம விளக்கம்:** [குருகுல வெளியீடு. 58 ந. ப. ஸ்டாம்பனுப்பி மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.] உபாகர்மா எனும் ஆவணி அவிட்ட தத்வார்த்தம். ஸமிதாதாநம் காமோகார் ஷீத் ஜபம் பிரும்ம யக்ஞம் மஹாஸங்கல்பம் அதன் அர்த்தம் யக்ஞோபவீத தாரண மந்த்ரம் காண்டர்ஷி தர்ப்பணம் மாந்தோல் மௌஞ்ஜீ தண்டம் தரிக்க மந்த்ரம் வியாஸ பூஜை வேத வேதாங்காதி ஆரம்பம் காயத்ரீ ஜப ஸங்கல்பம் காயத்ரீ மஹிமை த்யாநம், வர்ஷ அயந மாஸ பக்ஷ திதி நக்ஷத்ர ஸங்கல்ப வாரம், 8 கோத்ரங்கள், அபிவாதயே பொருள் இவைகளடங்கியது. உபாத்தியாயர் கிடைக்காவிடத்தில் இது உபாத்தியாயர் ஆகும். நாமே ஆசிரியராதலால் அதிகம் எழுதவில்லை. வேததர்மசாஸ்த்ர பரிபாலனஸபை ஒருமுறை இதைவாங்கி இலவசமாக அளித்தது. தர்ம பிரசாரார்த்தமானதால் அடக்க விலைக்கே தருகிறோம்.

**வரலக்ஷ்மீ பூஜை:** [மாம்பலம் குருகுல வெளியீடு. 2வது பதிப்பு. 44 பக்கம். 33 ந. பை. ஸ்டாம்பனுப்பிப் பெறலாம்.] லக்ஷ்மீ கடாக்ஷம் எங்கு உண்டாகும்? எங்கு உண்டாகாது? எத்தினை அவதாரங்கள்? லக்ஷ்மீ பெற வழி? லக்ஷ்மியே ராணிக்கு இந்த விரத முபதேசிக்க வந்து ஏமாந்து ராஜகன்யகைக்கு உபதேசித்தது முதலிய மிக அபூர்வமான விரதம் செய்வோர் இரவில் படிக்க வேண்டிய கதை. லக்ஷ்மீ 108 அர்ச்சனையுடன் பூஜாவிதி தோர பந்த விசேஷம் என்ன? முதலிய விரிவாக உளது. ஒவ்வொரு பெண்களும் அவச்யம் படிக்கவேண்டியது.

### ஸாமவேதிகளுக்கு அரிய முக்ய நூல்கள்.

(1) ஸாமவேத ஸந்த்யாவந்தநம் 16 பக்கம் 4 அணா. (2) ஸாமவேத உபாகர்மா பிரும்ம யக்ஞம் 68 பக்கம் ரூ. 1—4—0. (3) ஸாமவேத ச்ராத்த பிரயோகம் 64 பக்கம், பிரும்ம யக்ஞம் தர்பணமும் உள்ளது ரூ. 1—4—0.

(1) யஜுர்வேத உபாகர்ம 56 பக்கம் ரூ. 1—4—0. (2) யஜுர்வேத ஸந்த்யா 80 பக்கம் 8 அணா. (3) ஸ்ரீ வித்யா கட்க மாலா 80 பக்கம் ரூ 1. (4) நீதிசாஸ்த்ரம் 62 பக்கம் 12அணா. இதுமாத்ரம் தமிழர்த்தமுள்ளது. மற்றதெல்லாம் முழு ஸம்ஸ்கிருதம். நல்ல பத்ரிகை, எழுத்து. தபால் சார்ஜ்வேறு. ஷை நூல்கள் கிடைக்கும் இடம். (**ஸ்ரீ பால மநோரமா பிரஸ், மைலாப்பூர், சென்னை-4.**) (விரிவான மதிப்புரை பின்னர்.) தயைசெய்து கவனித்து ஷை நூல்களுக்கு அந்த விலாஸத்திற்கேஎழுதுக.

---

**இவைகளை ஜயித்தவனே வீரன்! தீரன்.**

# பாலபாரதம்.

**விராட பர்வா—** (ஆனிமீ தொடர்ச்சி)

கே : அர்ஜுநனுள்ள இடத்திலேயே அப்படிக்கூறினை?

ப: அவன் எதிரிலேயே அப்படிக் கூறினன். அர்ஜுநன், பிருஹன்னளை என்ற பேடி அர்ஜுநனுக்கு ஸாரத்தியம் செய்திருக்கிறன். அவனை ஸாரதியாகக் கொள் என உத்திரை என்ற அவன் ஸஹோதரி மூலம் கூறினன்.

கே : அவனதை ஏற்ருனு?

ப : மஹா வீரனைப்போல் தான் பேடிகளைப் பார்ப்பதே இல்லை, என பிரதிக்ஞைசெய்ததாகச் சொன்னன். ஆனல் ஆபத்துக்கு தோஷமில்லை, என்று கூறி ஏற்கும்படிச்செய்தார்கள்.

கே : போர் முனைக்குச் சென்று யுத்தம் செய்ய ஆரம்பித்தானு?

ப : ஸேனை த்வனியைக் கேட்டவுடன் பயந்து நடுங்கி தேரைத் திருப்பி ஊருக்கு ஓட்டும்படி கெஞ்சினன். அஞ்சாதே! அர்ஜுநன் போல் போர்செய்வதாகக் கூறினயே என்று போர் களத்திற்கு பேடி தேரை ஓட்டினள்.

கே : உத்தரனுக்கு தைர்யம் உண்டானதா?

ப : ஏது, அவன் பின்புறமாகக் குதித்து ஓட அவனை இழுத்து வந்து ஸாரத்யம் செய்யச்சொல்லி சமீ மரத்திலிருந்த தன்காண்டீவம் கொடி இவைகளை எடுத்து வந்து சங்கநாதம் செய்து வில்லை இழுத்தான். உத்தரன் மூர்ச்சித்து கீழே விழுந்தான்.

கே : ஆஹா! மகாவீரன் போலிருக்கிறது! பிறகு என்ன நேர்ந்தது?

ப : கௌரவர் ஸேனையில் இதைக்கண்டு ஆஶ்சர்யபட்டனர். ஆனல் துரோணர் ஸந்தேகமாக அங்கு நடந்ததைக்கூறி ஜாக்ரதையாக இருக்கச் சொன்னர்.

---

**ஸதா ஸாதுக்கள் உபதேசத்தைக் கேள்.**

அதற்குள் சில பாணங்கள் வந்து பீஷ்ம துரோணர்களை நமஸ்கரித்தது.

கே : அது எப்படி? பாணம் அடிக்குமே தவிர எப்படி வணங்கும்?

ப : அதுதான் நம்தேச அஸ்த்ர வித்யையின் பெருமை. அர்ஜுனன் திறமை. கௌரவவீரர் பலர். ஸேனை எண்ணிறந்தது. அர்ஜுனன் ஒருவன். ஸேனையோ கிடையாது. பயந்தாங்குள்ளி ஸாரதி. எனினும் வெற்றிப்பெற்றுன்.

கே : ஆச்சர்யம் தெய்வானுக்ரஹமே அவனுக்கு பலம். பீஷ்மர் வீரஸிம்மமாச்சே. எப்படி ஜயித்தான்?

ப : முதலில் குரு அருள் பெற்று பாஹு பலத்தைக் கொண்டு தேவர்களும் வியக்கும்படி ஸேனைகளைக் கொன்று வீரரை மூர்ச்சை யடையும்படிச் செய்தான். பிறகு மோஹனஸ்த்ரத்தால் எல்லோரையும் மயக்கி வஸ்த்ராபஹாரம் செய்தான்.

கே : எப்படி வஸ்த்ராபஹாரம் நடந்தது? எதற்காக?

ப : உத்தர குமாரனை அவன் ஸஹோதரி உத்தரை கௌரவர்களை ஜெயித்து அவர்களிடமிருந்து உயர்ந்த பட்டாடைகளைக் கொண்டுவா எனக்கூறினுள். ஆதலால் பீஷ்மரை தவிர மற்றவர்கள் உடலிலிருந்த வஸ்த்ரங்களையெல்லாம் உத்திரன் அபகரித்து வந்தான்.

கே : ஏன் பீஷ்மரிடம் மாத்திரம் செல்லவில்லை?

ப : அவர் தபஸ்ஸினுலும் பிரம்மசர்யத்தினுலும் இந்த அஸ்த்ரத்திற்கு கட்டுபட்டவரல்ல. ஆயினும் எல்லோரையும் போல தானும் படுத்திருந்தார்.

கே : ஒருவர் உடுத்திய ஆடையை எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும் பிறர் உடுத்தக்கூடாது என்பார்களே? உத்தரை அதை உடுப்பளா?

ப : இல்லை! இல்லை! பொம்மைக் கல்யாணம் செய்வதற்காக அதைக்கேட்டாள்.

---

**எவரிடமும் எதையும் யாசிக்காதே.**

# ஹாலாஸ்ய மஹிமை.

ஆகமப் பகுதி.



## மாமனாக வந்து வழக்குரைத்தது.

வணிகர் குலத்திலே தனபதி ஸுசீலை என தம்பதிகள் இருந்தனர். சிவபக்தியிற் சிறந்த இவர்களுக்குப் புத்ரபாக்யமில்லை. ஆதலால் தன் ஸஹோதரி மகனை ஸ்வீகார புத்ரனாக்கி வளர்த்து வந்தார். ஒருநாள் ஸகோதரி, அண்ணா! என் புத்ரனலல்லவா உனக்கு இம்மையிலும் மறுமையிலும் இன்பம் ஏற்படுகிறது. உனக்கேது பெருமை என குறைவாகப் பேசினாள். நமக்குப் புத்ர பாக்யம் மில்லாததால் அல்லவா இப்படி இகழ்ந்து பேசுகிறாள்? என வருந்தி சொத்துக்களையெல்லாம் அவர்களுக்கே அளித்து விட்டு வெளி நாடு சென்றான். ஸாதுக்களுக்குத் தீங்கிழைத்தவர் சுகப்படுவரா? தநபதியினது க்ஞாதிகள் ஒன்று சேர்ந்து தங்களுடையதே! ஸகல சொத்துக்களும். ஸ்வீகாரம்செய்ததை யார்கண்டார்! என்றனர். சொத்தை இழந்த ஸஹோதரி புத்ரன் ஹாலாஸ்ய நாதனிடம் சென்று முறையிட்டான். அவர்கள் தவறு செய்து இருந்தும் கருணாமூர்த்தியான பகவான் நாளை அரசரிடம் முறையிடு. நீதி பிறக்குமென அசரீரியாகக் கூறினார். அங்ஙனமே செய்ய, அரசன் ஸ்வீகாரம் செய்துகொண்டதிற்கு யார்ஸாக்ஷி என்றார். உடனே பகவானே மாமனை தநபதியாக வந்து நானே எனது சொந்தப் பொருள்களை அவர்களுக்களித்தேன் என்றார். பங்காளிகள் இவர் உண்மையான தநபதி அல்ல என்றனர். பகவான் உங்கள் தந்தை பெயர் இஃதல்லவா? மூதாதை இன்னவரல்லவா என்று பற்பல விருத்தாந்தங்களைக் கூறினார். அரசன் அவைகளைக் கொண்டு சொத்தை திருப்பித்தரும்படி தீர்ப்பளித்தார். தநபதி உடனே மறைந்தார். பகவானே மாமனாக வந்தவர் என உணர்ந்து அனைவரும் ஆச்சர்யம் அடைந்தனர்.

## வரகுணனுக்குச் சிவலோகம் காட்டியது.

வரகுணபாண்டியன் பலயக்ஞங்களைச் செய்து பரமசிவனைப் பூஜித்து வந்தான். அரசன் வேட்டையாடி வரும்

---

உள்ளதைக் கொண்டு திருப்தி யடை.

போது அவன் குதிரையின் கால் பட்டு ஒரு பிராம்மணன் இறந்தான். அந்த பிரும்மஹத்தி அரசனைப் பீடிக்க, பற்பல பிராயச்சித்தங்களைச் செய்தான் அரசன். ஒன்றாலும் அது அகலாததைக் கண்டு ஹாலாஸ்யநாதன் சந்நதியில் சென்று கதறினன். அரசே! உன்னுடன் போர்புரிய சோழ ராஜன் வருவான். அவனைத்துரத்திக் கொண்டு திருவிடை மருதூர் வரைசெல். அங்கே உனது ஹத்தி தோஷ மகலுமென அசரீரியாக பகவான் கூறினர். சில நாட்களில் அங்ஙனமே சோழன் போருக்கு வந்தான். பாண்டியனது வீர்யத்தைத் தாளாமல் பயந்து ஓடினன் சோழன். பாண்டியன் அவனைத் தொடர்ந்து திருவிடைமருதூர் வரை சென்றான். காவேரியில் முழுகி ஆலயத்திற்குச் சென்றான். பிரும்மஹத்தி கிழக்கு கோபுர வாசற்படியிலேயே நின்று விட்டது. மஹாலிங்கத்தின் உத்திரவுபடியே மேற்கு கோபுர வழியாகச் சென்றார் மன்னன்.

ஒரு சிவராத்ரி யன்று மீனம்பிகையின் ஸன்னதியிற் சென்று தனக்குக் கைலாசத்தைத் தர்ஶிக்க அருள் புரிய வேண்டுமென வேண்டினன். அன்னையின் வேண்டுகோளுக்கிணங்கி ஸோமசுந்தரர் கைலாஸத்தை அங்கேயே அமைத்து நந்தியைக் கொண்டு அரசனுக்கு அதைக் காண்பித்தார். பாண்டியனும் கைலாஸத்தில் பற்பல காக்ஷிகளை கண்டு பேராநந்தம் பெற்றார்.

### விறகு வெட்டியான லீலை.

வரகுணபாண்டின் ஆட்சியிலே ஹேமநாதன் என்றோர் வீணை வித்வான் வந்தான். எண்ணிறந்த பிருது தோடாக்கள் பெற்றவன். அவனது இனிய கானத்தைக் கேட்டு பரவசமான அரசன் அவனை ஆதரித்தான். ஏற்கனவே அரசாங்க வித்வானக இருக்கும் பாணபத்ரனை அழைத்து இவரைப் போல் நீ பாடவல்லவராயின் நாளை ஸபைக்கு வந்து பாடும் என்றான். இவருக்கு கானத்தை விட சிவபக்தியே அதிகம். பகவானிடம் சென்று முறையிட்டார். சுந்தரேசன் விறகுவெட்டி விற்கும் ஒரு கிழவன் போல் ஏமநாதன் வீட்டருகில் விறகுகட்டை வைத்துவிட்டு உட்கார்ந்துபாடினன். ஸாமகான பிரியன் ஸாமஸ்வரூபி

பகவான். அவரது பாடல் ஏமநாதனைப் பரவசமாக்க நீ யார் என வினவினர். பாணபத்ரனது சிஷ்யனில் பய னில்லாதவன் என கைவிடப்பட்டவன் நான் என்றார். உடனே ஏமநாதன் அஞ்சி ஊரைவிட்டு ஓடி விட்டான். இதை யறிந்த அரசன் ஆச்சர்யத்துடன் தன் வித்வானைக் கௌரவித்தான்.

## (சிபார்ச்) கடிதமெழுதிய லீலை.

பாணபத்ரன் கானத்தை சுந்தரேசனுக்கே அர்ப்பணம் செய்து வந்தான். மற்றவிடங்களுக்குச் செல்வதில்லை. கையிலிருந்த செல்வமெல்லாம் செலவாகி வருமையால் வாடினன். எனினும் இடைவிடாது சோமசுந்திரனைப் பாடுவான். கருணைக்கடலான பகவான் பாண்டியன் பொக்கிஷத்திலிருந்து வேண்டிய பொருளை ரஹஸ்ய மாகத் தந்தருளினர். அதுவும் போதாதென தனது பக்த னை சேரமான் பெருமானுக்கு, எனது பக்தனுக்கு வேண் டிய பொருள் உதவி செய்யென ஒரு கடிதம் கொடுத்து அனுப்பி கனவிலும் கூறினர். அவர்தந்த அனைத்தை யும் சோமசுந்தரருக்கும் அவர் பக்தருக்கும் அளித்து வாழ்ந்தான்.

## ரத்ந பலகை அளித்தது.

செல்வம் வந்தால் செறுக்கும் வரும். முன் உதவிய வரை மறக்கச்செய்யும். பாணபத்ரன் முன்னிலும் பன் மடங்கு அடக்கத்துடனும் பக்தியுடனும் பரமனைப் பாடி வந்தான். இரவில் ஸ்ரீ மீனாக்ஷி பள்ளியறைச் சென்ற வுடன் பாடுவது பழக்கம், ஒரு நாள் கார் இருள், மழை யும் ஓயாமல் கொட்டிற்று. ஓதம். வீணைக்கம்பி சப்திக்க வில்லை. எனினும் உடல் நடுக்க ஆலயம் சென்று பாடி னன். திடீரென நவரத்தினம் இழைத்த பலகை ஒன்று வர அதில் நின்று பாடு. முன்னர் இங்ஙனம் நாரதர் தும் புருகளுக்கே அளித்தோம். நீயே இதை எடுத்துச்செல் என பகவான் கூற இதைக்கண்டு மதுரை ஜநங்கள் மட் டில்லா மகிழ்ச்சி அடைந்து பாணபத்ரனையும் பரமன் கரு ணையையும் கொண்டாடினர்.

---

## கீத பரீக்ஷையில் வெற்றி அளித்தது.

ராஜராஜ பாண்டியன் தனது ஆசை மனைவி கூறிய படி பாணபத்ரன் மனைவியை அவமதிக்க விரும்பினன். அன்ய நாட்டிலிருந்து ஒரு பாடகியை அழைத்து அவளுடன் நீ பாடவேண்டும். தோற்றவர் வெற்றி பெற்றவர்களுக்கு அடிமை என பந்தயம் பேசி பாணன் மனைவியை அழைத்தான். ஸபை கூடிற்று. வந்த பாடகி பாணன் மனைவியை வீணன சொற்களால் தாக்கி பல கேள்விகளைக் கேட்டாள். என்னைப் பாட்டுப்போட்டிக்கே அரசன் அழைத்தார், அதற்கே நாம் கட்டுப்பட்டோம், என்ருள் பாணன் மனைவி. ஸபையோர் இதை ஆமோதிக்க இருவரும் பாடினர். பாணனது மனைவியின் பாட்டைக்கேட்டு ஆச்சர்யமடைந்தனர். ஆனல் அரசன் வந்தவளது பாட்டை மிகமிக மெச்சினன். அரசன் வழியைப் பின்பற்றி ஸபையோர் அவளை மெச்சினர்கள். பாணன்மனைவி சோமசுந்தரரிடம் சென்று முறையிட்டாள். நாளை நம்ஸபையில் போட்டி நடக்கட்டும் என்ருர் பகவான். அங்ஙனமே நடக்க பகவானும் ஓர் ஸபையினன் போல் வந்து அமர்ந்து கானம் கேட்டார். அரசனது பக்ஷபாதமுள்ள மனதை நல் வழிபடுத்தினர். முன்னர் கூறியதற்கு மாருக அன்று பாணன் மனைவி பாட்டையே மெச்சினர். ஸபையோர் ஒன்றுகூடி தோற்றவள் தோளில் பாணன் மனைவியை ஏற்றி நகர் வலம் வரும்படி செய்தனர்.

## பன்றிக்குட்டிகளுக்கு பாலும் பதவியும் அளித்தது.

வைகைக்கருகே குருஸ்தலமென்ருேர் நகரமுண்டு. அது பிருஹஸ்பதி தவம் செய்த இடம். ஆங்கு சுகலன் சுகலை என்ற வேளாள தம்பதிகள் தனிகராகவும் தர்மசீலராகவும் பக்தராகவுமிருந்தார். பன்னிரண்டு புத்திரர்கள் அவர்களுக்குத் தோன்றினர். பெற்ருேர் புத்திரபாசத்தால் அளவு கடந்த இடம்கொடுத்து அவர்களை வளர்த்தனர். இவர்களிறக்க அக்குழந்தைகள் அடக்கமின்றி தவம் செய்யும் பிருஹஸ்பதியை பார்த்து நகைத்து கல்லால் அடித்து ஹிம்ஸை செய்தனர். கோபங்கொண்ட குரு அவர்களைப் பன்றிக்குட்டிகளாகப் பிறந்து தாயையிழக்கும்படி சபித்தார்.

---

**எல்லா பற்றையும் விடுவதே ஸௌக்கியம்.**

# ஆயுர் வேதம். (9)

வைத்திய பகுதி.

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.
1/3 A, D'Sylva Road, Mylapore, Madras-4.

***அதிஸார நிவிருத்தி லக்ஷணங்கள்*** – நன்ருக உணவு ஜீர்ணமாதல், குடல் லகுவாகத் தோன்றல், அபாநவாயு தாராளமாக வெளி வருதல், மூத்திரம் போகும்போதும் மலம் சிறிதும் வெளிவராநிருத்தல் ஆகியனவாம்.

***விஷூசி*** – என்ற வியாதி வெகு அபாயமானது. எந்த சமயத்திலும் மரணம் நேரிடலாம். நகம், உதடு, பற்கள் இவை கருநிறமடைதல், நினைவு தவறல், அதிக வேதனையுடன் வாந்தி, கண்கள் குழி விழுதல், குரல் மிகவும் கம்மல், தேகப்பூட்டுகள் தளர்ந்துவிடல் ஆகிய குறிகள் நல்லதல்ல.

நவீன வைத்ய சாஸ்திரப்படி அதிஸாரம் முதலிய இங்கு விவரிக்கப்பட்ட வியாதிகள் எல்லாம் டயாரியா, டிஸென்டரி, ஸ்புரூ, காலரா என்ற வகைகளில் அடங்கும். கடைசியில் குறிப்பிட்ட **காலரா** என்பது ஒரு கடுமையான தொத்து வியாதி. முக்கியமாய் காலரா கிருமிகளை மலத்தில் காணலாம். சில விஷூசி ரோகங்கள் காலராவாயிருக்கலாம். ஆனல் ஆகார விஷத்தால் உண்டாகும் டயாரியாக்கள் கூட விஷூசி மாதிரி இருக்கும். **ஸங்கிரஹக்ரஹணி** ரோகத்தின் குறி குணங்கள். **ஸ்புரூ** என்ற வியாதிக்கு ஒத்திருக்கும். இது சிகித்ஸைக்குக் கஷ்ட ஸாத்தியம். சரியான காரணம் தெரியவில்லை.

அதிஸார ரோகம் **டயாரியா, டிஸென்டரி** என்ற இரு வியாதிகளில் சேரும். மலப்பரீக்ஷை முக்கியம். பிரத்யேக சோதனையால், டிஸென்டரீ பாஸிலை அல்லது அமீபா போன்ற குடல் கிருமிகள் இருக்கின்றனவா என்று தெரிந்துகொள்ளவேண்டும். இவைகளன்றியும், ஆகாரக் கோளாறுகள், அஜீர்ணம், குடலழற்சி, நரம்பு வியாதிகள் முதலியவற்ருல் டயாரியா உண்டாகும். அதிஸாரம் வெகுநாட்பட்டதாகவும், விட்டு விட்டும், தேகமிளைத்தல், சாயங்கால ஜ்வரம், வியர்வை இவைகளுடனும்இருந்தால்

---

**போதாது இன்னும் வேண்டுமென்பதே துக்கம்.**

டுயுபர் குலோஸிஸ் காரணமாயிருக்கலாம். சாதாரண சிகித்ஸைகளுக்கு வசப்படாத அதிஸார ரோகங்களை நவீன முறைப்படி நிபுணர்களைக்கொண்டு, நிதானத்தைத் தெரிந்து தகுந்த சிகித்ஸை செய்து கொள்ள வேண்டும். சாதாரண சிகித்ஸைகளையும், மருந்துகளையும் இப்பொழுது கவனிப்போம்.

## நெல்லிக்காய்.

திரிபலா வர்க்கத்தில் உணவாகவும் மருந்தாகவும் அதிகமாக உபயோகப்படுவது நெல்லிக்காய். இதற்கு ஆமலகம், தாத்ரீ (தாயைப் போன்றது) ஸ்ரீபலம், பஞ்சாஸ, அம்ருத பலம் என பல பர்யாயப் பெயர்கள் உண்டு. கடுக்காயைப் போன்ற குணங்களுடையது. இதில் லவணம் தவிர மற்ற ஐந்து ரஸங்களுண்டு. சிறிது ரூக்ஷம் - சீத வீர்யம் - மதுர விபாகம் - த்ரிதோஷ ஹரம் - சுக்ரகரம் (**ஹரம்** - போக்கடித்தல் - **கரம்** - விருத்தி செய்தல்) - காந்திகரம் - தாது விர்த்தி செய்வது - கேஶ்யம் (கூந்தலை வளர்ப்பது) - ரஸாயனம் ஆகிய குணங்களையுடையது. ரக்த பித்தம் - பிரமேகம் - பிரதரம் (பெரும் பாடு) - ஶ்வாஸம் - காஸம் - வாத பித்த ஜ்வரம் - உன்மாதம்) - வாயிற் நீர் சுரத்தல் - வாந்தி - தலைச் சுற்றல் ஆகியவை போம். மலத்தை இளகச் செய்யும்.

சாதாரணமாய் (அதுவும் உபவாஸமிருந்த மறுநாள் பாரணையில்) நெல்லிக்காயை துகையலாகவோ, பச்சடியாகவோ, ஊறுகாயாகவோ உபயோகிக்கிறார்கள். அரோசம் போம் - பசிதீபனமுண்டாகும். பித்தமடங்கும்.

**பிரயோகங்கள்** (1) ஜுரத்தில் காணும் தூக்கம் இல்லாமைக்கும், நாவறட்சிக்கும் - சுக்கு 1 பாகம் - நெல்லிக்காய் 2 பாகம் போட்டு காய்ச்சிய கஞ்சியில் ஒரு ஸ்பூன் நெய்யும் சிறிது சர்க்கரையும் சேர்த்துக்கொடுக்கவும். (2) நெல்லி முள்ளியை அரைத்து தலைக்கு இட்டு மூழ்க உடற்சூடு, கண் எரிச்சல் இவை நீங்கும். (3) நெல்லி இலைக் கொழுந்தை அரைத்து கச்சக்காய் அளவு மோரில் கலந்து, சீதபேதிக்கு தினம் இருதடவை கொடுக்கவும்.

---

**போது மென்பதே பொன்னிலும் சிறந்தது.**

# விநாயக புராணம்.

எந்த லோகத்திலும் குழந்தைகளைக் காணவில்லை. தனது சக்தியினால் அனைவரையும் படைத்து வழக்கப்படி அவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார். சில காலம் சென்றபின் நான்முகன் விநாயகர் செயலை அறிய பூலோகம் வந்தார். ஆங்கு முனிகுமாரர்களைக் கண்டு ஆச்சர்யம் கொண்டு அவரைப் போற்றினார். [ஆங்குள்ள குமாரர்கள் அனைவரையும் விநாயகர்களாகக் கண்டு அவர் எங்கும் நிறைந்தவர். எல்லா வஸ்துக்களாகவும் இருப்பவர் எனக் கொண்டாடி அபசாரத்தை க்ஷமிக்கும்படி வேண்டிச் சென்றார்.

பிரஹ்மாவிற்கு விச்வ ரூபத்தையும் காண்பித்து அனுக்ரஹித்தார். ஒரு சதுர்த்தியில் அந்த ஆச்ரமத்தில் உள்ள அனைவரும் மண்ணினால் விநாயக மூர்த்தியை செய்து பூஜித்தார்கள். கௌரி பன்னிரண்டாமாண்டில் குழந்தை பிறந்த நாளைக் கொண்டாடி எல்லோருக்கும் சந்தன, தாம்பூலம், உபாயனம் வழங்கினாள். விச்வ தேவன் எனும் அஸுரன் மாயையினால் திருமாலுருவம் தரித்து தேவி இருப்பிடம் வந்தான். தேவியும் விநாயகரும் அவரை விஷ்ணு ஸாரூப்யம் பெற்ற பக்தன் என அன்புடன் பூஜித்தனர். இலையில் அமர்ந்து உண்ணும் தருவாயில் உண்ணாமல் மௌனமாயிருந்தான். தேவி பூஜிக்கலாமே என்று ப்ரார்த்திக்க அவன் பாற்கடலில் உள்ள பகவானை தர்சித்து தான் உண்பது பழக்கம் என்றான். ஸ்வாமின்! இதை முன்னமே கூறியிருந்தால் எனது நாதன் அவரை அழைத்திருப்பார். திடீரென அவரிடம் போய்க் கூறினால் ஒரு ஸமயம் கோபிப்பார். என் செய்வது? என்று ஒன்றும் புரியவில்லை என்றாள். மயூரேசர், ஸாதோ! கௌரியை தர்சிக்க எத்தனையோ பேர் தவம் செய்கின்றார்கள். உமது பாக்யத்தினால் அவளுக்கு அதிதியாக வந்தீர். விஷ்ணு எல்லாவிடங்களில் இருப்பதால் நானும் விஷ்ணுவே என்னை தர்சித்து நீர் புசிக்கலாமென்று கூறினார். அவன் நான் விஷ்ணுபக்தன். மற்றவர்களை வணங்கமாட்டேன். உனக்கு ஸாமர்த்திய மிருந்தால் நீ நாராயணனை அழைத்துக் காட்டு என்றான். மயூரேசர் சங்க சக்ர கதாபாணியான மஹாவிஷ்ணுவாக தர்சனந்தந்தார். விச்வேதேவன் அவரை வணங்கிக்கொண்டாடினான்.

அவரும் விஶ்வேதேவனைத் தழுவி நான் பக்தர்களுடைய ப்ரீதிக்கினங்க பற்பல ரூபங்களை எடுக்கின்றேன், என்று ஆசிர்வதித்தார். அங்கு சதுர்த்தி உற்சவம் மிக விசேஷமாக நடைபெற்றது.

வஸிஷ்டருடைய பேரனை பராஶரன் என்ற நாலு வயது குழந்தை விளையாட்டாக மண்ணினல் விநாயகரைச் செய்து உலர்ந்த இலைகளாலும் மண்ணலும் பூஜை நிவேதனங்களைச் செய்தார்.

தானளித்த மண்ணலாகிய பக்ஷ்யங்களைச் சாப்பிட வில்லை விநாயகர் என அழுதான். மண்மயமான மூர்த்தி உயிருள்ள சரீரமாகி அந்த மண் பக்ஷ்யங்களையெல்லாம் புஜிக்க இதைக்கண்டு ஆஶ்சர்யமடைந்த விஶ்வேதேவன் குழந்தை விளையாட்டாக அளித்த மண்ணை எப்படி புஜித்தீர் என்று வினவினன். மயூரேஶர்! பக்தியோடு அளிக்கும் மண்ணும் எனக்கு அம்ருதமாகும் பக்தி இல்லாதவன் தரும் அம்ருதமும் மண்ணகுமென்ருர். ஆனல் உமது பக்தரைக் காட்டும் பார்க்கலாமென்று விஶ்வேதேவன்கூற அவன் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு ஆஶ்ரமத்தில் உள்ள ஒவ்வொரு வீடாகச் சென்ருர். ஆங்காங்கு மயில் வாஹநத்துடன் இருக்கும் விநயகரையும் விஷ்ணு வடிவத்துடன் தானும் அங்கிருப்பதையும் கண்டு விஶ்வேதேவன் ஆஶ்சர்யமடைந்தான். ஆனல் எனது தெய்வமான விஷ்ணு அல்ல! அங்குள்ளது என்று அவன் கூறும் பொழுது சிற்சில மூர்த்திகள் விஷ்ணு ரூபிகளாக தோன்றின. வஸிஷ்டருடைய ஆஶ்ரமத்திற்கு வந்து பக்தியோடு மண்ணிலேயே ஸகல உபசாரங்களைச் செய்து பூஜிக்கும் பராஶரனைக் காட்டி இவரே எனது உத்தம பக்தன் என்ருர். அங்கும் ஒரு நிமிஷம், ஆகாசத்திலும் ஒரு நிமிஷம், பூமியிலும் ஒரு நிமிஷம் விஷ்ணுவாகவும், ஒரு நிமிஷம் மயூரேஶனகவும் காக்ஷியளித்தார். அதைக்கண்டு விஷ்ணு வேறு, விநாயகன் வேறு என்ற பேதத்தை விட்டு விநாயகரை உபாஸித்துவந்தான். ராக்ஷஸகுணமகன்றது. பக்த வேஷம் தரித்ததால் உண்மை பக்தனுனன்.

பதிமூன்ருமாண்டில் பரமசிவன் படுத்துறங்கும் பொழுது சிவன் சிரஸ்ஸிலிருந்த சந்த்ரகலையை அபகரித்து வந்து சிறுவர்களுடன் சேர்ந்துவிளையாடினர் விநாயகர்.

அச்சமயம் ஓர் அரக்கன் உக்ரமான பன்றியின் உருவம் தாங்கி சிறுவர்களைக் கடித்து ஹிம்ஸித்தான். விநாயகர் அவன் வாயைப் பிளந்து அவனைக் கொன்றார். அவன் பயங்கரமான ராக்ஷஸ உருவத்துடன் பூமியில் விழுந்து மாண்டான். பரமசிவன் எழுந்து தன் சிரஸிலுள்ள சந்த்ர கலையைக் காணாமல் காவலாளிகளைக் கடிந்து அதை எடுத்துச் சென்றது யார்? விரைவில் கொண்டு வராவிடில் உங்களைச் சாம்பலாக்கி விடுவேன் என்றார். அனைவரும் பயந்தோடி விநாயகரிடம் சென்றார்கள். விநாயகர்விட்ட மூச்சுக் காற்றினால் அனைவரும் பரமசிவனிடம்வந்து விழுந்தார்கள். பரமசிவன் கோபங்கொண்டு ப்ரமத கணங்களை அனுப்பினார். அவர்கள் அருகில் வந்தபொழுது திடீரென மறைந்தார். அவர்கள் விடு விடாகத் தேடிச்செல்ல ஆங்காங்குமுள்ள அவரைப்பிடிக்க முயற்சித்தார்கள். அவர்கள் அருகில்வரும்பொழுது விநாயகர் மறைந்துவேரிடத்தில் காணப்படுவார் .அங்கனம் அவர்கள் ஆடி ஓடி, களைத்து பயந்து வருந்துவதைக் கண்ட கருணாமூர்த்தியான பகவான் அவர்கள் கையில் சிக்கிக்கொண்டார். அவரை அனைவரும் சேர்ந்து அழைத்துவர முயற்சித்தார்கள். அவர் அசையாமல் மலைபோல் அமர்ந்து இருக்க அழைத்துவர முடியாமல் வருந்தினர். சிவன் கோபங்கொண்டு நந்தியையனுப்பினார். நந்தி வேகத்துடன் வந்து நான் முன்வந்த சிவகணங்களைப் போலல்ல, நீ வராவிடில் கட்டி இழுத்துச் செல்வேன் உன்னை என்றார்.

விநாயகர் மூச்சை வெளியேவிடும் பொழுது நந்தி வெளியேசென்றான், மூச்சை உள்ளே இழுக்கும்போதவன் உள்ளே வந்தான். இங்ஙனம் நந்தி தூரே ஓடுவதாலும் அருகே வருவதாலும் களைத்து கஷ்டப்படுவதைக் கண்டு ஒரு மூச்சினால் சிவனருகே அவனைக் கொண்டு தள்ளினார். ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தன்னருகில் விழுந்த நந்தியைக் கண்டு சிவனுக்குக் கோபம் அதிகமாயிற்று. அச்சமயம் சிவனருகில் தேவியும் விநாயகரும் நின்றனர். அதைக்கண்டு கோபமகன்ற சிவனை அப்பா! உன் தலையிலேயே சந்த்ரகலை இருக்க வீணாக என்னைத் திருடன் எனக்கருதி பிடித்துவரும்படி ஏன் உத்தரவிட்டீர்? என்றார். சந்த்ர சூடனும் தன் சிரஸில் சந்திரனைக் கண்டு ஆச்சர்ய

முடைந்தார். சிவகணங்கள் அவரை வணங்கி இன்று முதல் மயூரேசர் எங்களுக்கு தலைவராக இருந்து கணபதி என்ற பெயரைப் பெறட்டும் என்று வேண்டினார்கள். சிவனும் அதை ஆமோதித்தார்.

வினாயகரது பதினான்காவது ஆண்டில் உமையவள் மஹரிஷிகளை அழைத்துஅடிக்கடி என்குமாரனுக்கு பற்பல தீமைகள் ஏற்படுவதால் ஏதேனும் ஒரு பரிகாரம் செய்ய வேண்டுமெனக் கோரினாள். இந்த்ர யாகம் செய்வதே அதையகற்ற வழிஎன்றுகூற, தேவியினுத்தரவுபடி தனது பரிவாரங்களுடன் தேவேந்திரனை விக்ரஹத்தில் ஆவாஹனம் செய்து பூஜித்தார்கள். பற்பல சாந்தி ஜபங்களைச் செய்தார்கள். விக்னத்தை அகற்றுவதற்கேற்ற மந்த்ரங்களைக் கூறி அக்னியில் ஆஹுதியும் செய்தார்கள். இதனிடையில் கலன் விகலன் என்ற இருஅரக்கர்கள் எருமை வேஷம் பூண்டு ஒருவரோடு ஒருவர் யுத்தம் செய்வது என்ற வ்யாஜமாக ஆச்ரம மரங்களை முறித்து குளங்களை குழப்பினார்கள். கொம்பினால் முட்டித் தள்ளப்பட்ட மற்றொன்று அருகில் உள்ளவர் மீது விழுந்து அவர்களைக் கொல்ல ஆரம்பித்தது. கணேசன் இருவர்கள் வாலையும் பிடித்து இழுத்து எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது பூமியில் தள்ளி காலால் உதைத்துக் கொன்றார். எல்லோரும் கொண்டாட விநாயகர் இந்த்ரயாகம் நடக்குமிடம் வந்தார். ஆங்குள்ள இந்த்ர விக்ரஹத்தைத் தூக்கி எறிந்து முனிவர்களே எதற்காக இந்த யாகம்? இந்த இந்த்ரனால் நமக்கு என்ன நன்மை உண்டாகும்?.

காமதேனுவை விட்டு அஜத்தைப் பூஜிப்பதேன் என்று கூறி யாகப் பொருள்களை யெல்லாம் எடுத்துச் சென்றார். அக்னியையும் அவித்து விட்டார். மகரிஷிகள் ஒன்றும் சொல்ல முடியாமல் தேவியினிடம் சென்று முறையிட்டார்கள். தேவேந்த்ரன் தன் யாகத்தையும் கெடுத்து தனது மூர்த்தியையும் தூக்கி எறிந்த மயூரேசனிடம் கோபங்கொண்டான். தேவர்கள் அவரை ஸமாதானப் படுத்தி மயூரேசனைக் கட்டி வருகின்றோம். உத்திரவு கொடுங்கள் என்றார்கள். சக்ரன் அக்னியை அழைத்து நீ பூலோகத்திலுள்ள சக்தியையெல்லாம் அடக்கிக்கொண்டு இங்கே வந்து விடு. ஒவ்வொருவருடைய வயிற்றுள்

உள்ள ஜாடராக்னியையும் வேலை செய்யாதபடி இங்கே இழுத்து வா என்றான். அக்னி அங்ஙனமே செய்ய அரணியைக் கடைந்தபொழுது அக்னி உண்டாகவில்லை. அடுப்பை மூட்டும் பொழுது அங்கும் தீ யில்லை. ஒவ்வொருவர் வயிற்றிலும் ஜாடராக்னி இல்லாததால் பலர் பலவகையான துன்பங்களை அனுபவித்தார்கள். எல்லோரும் விநாயகரிடம் முறையிட அவர் எல்லா அக்னிவடிவமாகவும் ஆனார். ஆதலால் எல்லோரது எல்லா வகையான கஷ்டங்களும் அகன்றன. இந்த்ரன் வாயுவை அழைத்து நீ எங்கும் வீசாமல் இங்கு வந்து விடு என்றான். வாயு வெளியில் வீசாததுடன் ஒவ்வொருவருக்கும் உச்வாஸநிஶ்வாஸமில்லாதபடிச் செய்தார். அனைவரும் பிணம்போல் விழக்கண்ட விநாயகர் வாயுவாகி வீச ஆரம்பித்தார்.

அனைவரும் எழுந்து விநாயகரைப் போற்றினார்கள். சக்ரன் சூரியனை நீ ப்ரளயகால ரவியைப்போல் உலகெலாம் கொளுத்திச் சாம்பலாக்கு' என்றான். வெப்பம்தாளாமல் எல்லோரும் விநாயகரை வேண்டினர். உடனே அவர் மேகத்தை உண்டுபண்ணி ஸௌர்ய தாபத்தை அகற்றினார். தனது முயற்சி எல்லாம் வீணானதைக் கண்ட மகவா கர்வத்தை விட்டு அவர் திருவடியை வணங்கித் துதித்து மன்னிக்கும்படி வேண்டினான். பதினைந்தாவது ஆண்டில் விநாயகர் கோஷ்டிகளுடன் பிரும்மகமண்டலு தீர்த்தத்தில் நீராடி அங்குள்ள ஒரு மந்திரத்தில் நுழைய ஆரம்பித்தனர். கார்க்யர் உட்சென்றவுடன் கதவு தானே தாளிட்டுக் கொண்டது. உள்ளிருந்து அவரும் வெளியிலிருந்து பாலர்களும் கதவைத்திறக்க முயற்சித்தனர். முடியவில்லை. இதனிடையில் ஒரு அசுரன் புலியாகி வந்து சிறுவர்களைப் பக்ஷித்தான். அவர்களது கதறுதலை கேட்டு பகவான் தானும் புலியாகி அசுரனைத் துரத்தினார். அவன் காட்டில் புகுந்து புதரில்பதுங்கி தன்னைக் காக்கவேண்டிய முயற்சி செய்தான். பகவான் ஒரு மரத்திலேறி புதரில் குதித்து அவனைக் கொன்று இறந்தவர்களை எழுப்பினார். கதவும் திறந்தது.

ஒருநாள் எல்லோரும் ஆடிப்பாடிக்களைத்து ஒருமரத்தடியில் களைப்பாறப் படுத்துக்கொண்டார்கள். தெற்குப் புறம் காலை நீட்டிப் படுத்து இருப்பதைக் கண்டான்

தென்திசைக்குத் தலைவனான யமன். தன்னை அவமதித்த தாக கருதுகிறவர்களையெல்லாம் தூக்கிச் சென்றான். முனிவர் தங்கள் குழந்தைகளைக் காணமல் வருந்தினர். விநாயகர் விரைந்து சென்று மஹிஷத்தின்மீதமர்ந்திருந்த யமனை கீழேத் தள்ளினர். எழுந்த யமன் அவர் திருவடியில் விழுந்து வணங்கித் துதித்தான். சிறுவர்களை அழைத்து வந்து ஆஶ்ரமத்தில் விட்டுவிட்டு பகவானை வணங்கி விடை பெற்றுச் சென்றான்.

யௌவந பிராயம் அடைந்த விநாயகனுக்கு தக்க கன்யகையைத் தேடி மணம்செய்வித்து அந்த ஆநந்தத்தை அநுபவிக்ககருதினள் உமாதேவி. பதியிடம் இதைத் தெரு வித்து தக்க கன்யகை யார்? எங்கிருக்கிருள்? என யோசித்தாள். இதனிடையில் நாரதர் வந்து இருவரையும் வணங்கித் துதித்தார். யோக க்ஷேமம் விசாரித்து வந்த விஷயம் யாதென வினவினர். அவர் தனது தந்தை பிரும்மாவின் புத்ரியான ஸித்தி புத்திகளை விநாயகருக்கு தந்து மணம் செய்விக்க பிரார்த்தித்தார் என்றார். இதைக் கேட்ட பார்வதி பரமேஶ்வரர்கள் ஸந்தோஷமடைந்து பல வகையிலும் பொருத்தமான விவாஹமிது. வரனும் கன்யகைகளும் குணம் குலம் ஶீலம் அழகு இவைகளில் ஸமமானவர் என்று கொண்டாடி அதை ஏற்றுக்கொண்டு உடனே விவாஹத்திற்கு வேண்டிய முயற்சி செய்தார். முப்பத்து முக்கோடி தேவர்கள் ஏழு கோடி சிவகணங்கள் எண்பத்தெட்டாயிரம் முனிவர்கள் முதலிய அனைவரையும் அழைத்து வரும்படி ஆக்ஞையிட்டார்.

எல்லோரும் கண்டகீ நகரை நாடிக்கிளம்பினர்கள். இதை அறிந்த அரக்கர் கூட்டமாக வந்து வழியை மறித்து வலுவிலே போரிட்டனர். பகவான் லீலையாக முனிகுமாரர்களை உங்கள் கரத்திலுள்ள தர்ப்பங்களால் அஞ்சாமல் அரக்கர்களைக் கொல்லுங்கள் என்றார். அவர் சொல்பலத்தைக் கொண்டு மஹாவீரர்களைப் போல் முனி குமாரர்கள் யுத்தம் செய்து அரக்கர்கள் அனைவரையும் கொன்று வெற்றியுடன் வீரநாதம் செய்தனர். அனைவரும் கண்டகீ நகரம் சென்றனர். ஸிந்துவால் சிறையிடப் பட்ட இந்த்ரன் முதலியவர்களை மீட்டு பின்பு விவாஹம் நடத்தலாம் என்றார் கணேசன். பரமசிவன் அதை ஆமோதித்தார்.

தூதனை யனுப்பி அவன் ஸந்திக்கு வராவிடில் பிறகு அவனைக் கொல்வோம். யார் தூதனாக செல்லக் கூடிய யோக்யதை உள்ளவன்? எனயோசித்து முடிவில் நந்தியை ஸிந்துவிடம் தூதனாக அனுப்பினார்கள். சக்ரனை விடுவித்து ஸ்வர்க்கத்தை அவனுக்களி. பாதாளம் சென்று உன் ராஜ்யத்தை ஆண்டுவா. இல்லையேல் உன்னைக் கொல்வோம் என அறிவிக்கும்படி கூறினார் மயூரேசர்.

மிக்கபயங்கரமான ராக்ஷஸ வீரர்களால் சூழப்பட்டு பயங்கர உருவுடன் ரத்ந ஸிம்மாஸநத்தில் அமர்ந்துள்ள ஸிந்துவைக் கண்டார் நந்தி. கணேசன் கூறியவைகளைச் சொல்லி திருபுரன் ஹிரண்யன் தாரகன் முதலியவர்கள் தேவஹிம்சை செய்ததால் கொல்லப்பட்டனர். நீ சுகமாக வாழ விரும்பினால் கணேசன் கூறியபடி நட என ஹிதம் கூறினார். கோபங்கொண்ட ஸிந்து ஓ காளையே! யாரை மிரட்டுகிறாய்? என் முன்னே சிவன் யார்? அவர் ஸிஶுவா என்னைக் கொல்வான்? ஒரு நிமிஷத்தில் அனைவரையும் கொல்வேன். உன்னை ஏரில் கட்டி உழும்படி செய்வேன் என்றான். நந்தி கோபத்துடன் பெருமூச்சு விட்டார். அதனால் அநேக அரக்கர் மாண்டனர். விரைவாக விநாயகரிடம் வந்து நடந்ததைக் கூறி போருக்குந் தயார் செய்தார். முனிவர்களை ஆஶ்ரமத்தில் அமர்த்தி ஸிந்து நகரத்தை நாடி ஸேனையைக் கிளப்பி அனுப்பினார்.

மயூரேசன் யுத்தத்திற்கு கிளம்ப நந்தி முதலியோர் முதலில் தங்களை அனுப்பும்படி வேண்டினர். வீராட்டஹாஸத்துடன் கணங்கள் ஸிந்துவைக்கொல்வோம்! அவன் ஸேனையை அழிப்போம்! சக்ரனை விடுவிப்போம்! என வீரநாதம் செய்து ஸிந்து நகரைச் சூழ்ந்து கொண்டனர். இதைக் கேட்ட ஸிந்து ஆஹா! இதோ வந்து விட்டேன். ஸிம்மத்துடன் முயல்கள் யுத்தம்செய்வதா? என்று கிளம்பினான். வீர ஸேநாபதிகள் பிரபோ! நாங்கள் இருக்கும் பொழுது தாங்கள் ஏன் செல்லவேண்டும்? உத்தரவு அளியுங்கள். வெற்றியுடன் வருகிறோம். என ரணகளம்சென்றனர். உபவாஸமிருந்தவனுக்கு உணவு கிட்டியதுபோல் கணேஶ கணங்கள் ஸந்தோஷமடைந்து பல ராக்ஷஸ வீரர்களை யமலோகம் அனுப்பினர். எஞ்சியுள்ள வீரர் இரட்டை இரட்டையாகச் சேர்ந்து யுத்தம் செய்தனர்.

ராக்ஷஸர்களுக்கு வெற்றியும் சிவகணங்களுக்குச் சிறிது தோல்வியும் தோன்றிற்று.

விருஷபாரூடரான ஶிவனும் மயூர ஆரூடனான கணே ஶனும் போரில் மிகுந்த அரக்கர் படையை அழித்தனர். சினங்கொண்டு சீறி எழுந்தான் ஸிந்து. அவனை அமர்த்தி அவனது அமாத்யரான கௌஸ்துபனும் மைத்ரனும் யுத்தத்திற்கு வந்தனர், வீரபத்ரனும் குஹனும் இவர் களை எதிர்த்து போராடினர். வீரர் வியக்கும்படி இவர்கள் சரங்களால் ஒருவரை ஒருவர் தாக்கினர். கரத்திலுள்ள ஆயுதம் ஆயின. பின் மல்லயுத்தம் செய்தனர். இங் ஙனமே இரு ஸேனைகளும் கைகலந்து போரிட அஸுர ஸேனை சிறிது வெற்றிகொண்டது. வீரபத்ரனும் குஹ னும் களைத்து கணேஶனருகே சென்றனர். ஸூர்ய அஸ்த மனமாயிற்று. எங்கும் இருள்சூழ பகைவரென்றெண்ணி இருஸேனைகளும் தன்னைச் சார்ந்தவர்களையே கொன்றது. கணேஶனது அருளைக்கொண்டு குஹன் மித்ரனையும் கௌஸ்துபனையும் கொன்றான். அஸுரஸேனை பயந்து ஓடிற்று.

ஸிந்து கோடிக்கணக்கான வீரர்களைத் திரட்டி போர் முனைக்குவந்தான். இரு ஸேனைகளிலும் வ்யூஹம் அமைக் கப்பட்டது. கந்தனை எதிர்த்தான் ஸ்கந்தன். மதநாந்தகனை எதிர்த்தான் வீரபாகு. பன்மடங்கு வேகத்துடன் போர் துவங்கிற்று. அறுந்த தலைகள் மலைபோல் குவிந்தன. ரத்தம் ஆறாக ஓடிற்று. பூதப்ரேத பிஶாசங்கள் வயிறார உண்டு களித்தன. நரிகளும் ஓநாய்களும் இடையே புகுந்து மாம்ஸத்தைப் புஜித்தன. கந்தாஸுரனைக் கொன்று வீழ்த்தினான் ஸ்கந்தன். ஆக்ரஹத்துடன் பல ராக்ஷஸவீரர் ஒன்று சேர்ந்து குஹனைத் தாக்கினர். அவருக்கு உதவிபுரிய வந்தான் வீரபத்ரன். அஸுர ஶரத்தால் அடிபட்டு வீரபத்ரன் மூர்ச்சையாகி விழுந்தான் பூமியில். ஸ்கந்தனை அடித்துத்தள்ளி அவர் கழுத்தில் கயிற்றைக் கட்டி இழுத்துச்செல்ல முயன்றனர் அஸுரர். இதைக்கண்டு நந்தி ஓடோடி வந்து அவர்களைத் தாக்கி னார். அனைவரும் ஒன்று சேர்ந்து நந்தியைக் கொல்ல முயற்சித்தனர். நந்தி மூர்ச்சையாகி அவனியில் சாய்ந்தார்.

புஷ்ப தந்தன் முதலிய ஶிவஸேநா வீரர்கள் ஓடிவந்து மலைகளைத் தூக்கி வந்து அஸுர ஸேனைமீது எறிந்து பல வீரர்களைக் கொன்றார்கள். தேவ ஸேனை வெற்றிநாதம் செய்தது. அஸுரர் பயந்து ஓட, வந்தான் ஸிந்து ஆக்ர ஹத்துடன். கும்பல் கும்பலாக ஸுரஸேனையை அழித் தான். வீரபத்ரர் காலைப்பிடித்துத் தூக்கி பூமியில் அறைந்தான். மயூரேசன் இதைக்கண்டு தானே அவனோடு போர் புரிந்தார். பயங்கரமான யுத்தம் நடந்தது. ஸிந்து வின் வீரவாதமும் அட்டஹாஸமும் வானெலாம் பரவி யது. ஸூர்யன் அருளால் கிட்டியதும் அமோகமுமான ஶரத்தை ஏவினான் ஸிந்து. அதன் ஜ்வாலையைக்கண்டு உலகெலாம் நடுங்கிற்று. தேவஸேனைகதி இனியாதோ என ஏங்கினர் தேவர். பரஶு எனும் ஆயுதத்தை ஏவி னார் விநாயகர். அதன் ஜ்வாலை பதிநான்கு உலகிலும் பரவியது. ஆகாஶத்தில் எழும்பி நடுவழியிலேயே ஸூர்ய அஸ்த்ரத்தை அழித்தது பரஶு. உலகையே அழிக்க வல்ல சக்ரத்தை ஸிந்து அனுப்ப ஶூலத்தினால் அதை அடக்கினார் மயூரேசன்.

ஸிந்துவின் கிரீடத்தைக் கீழே தள்ளி அவன் காது களையும் அறுத்து எறிந்தது சூலம். இதுவரை நேராத அவமானம். உனது நீண்ட துதிக்கையை அறுத்துத் தள்ளுகிறேன் என, கத்தி ஏந்தி கணேசரிடம் ஓடி வந்தான் ஸிந்து. பகவான் பல ரூபங்களை எடுத்து நான்குகரங்களி லும் ஆயுதங்களுடன் நிற்க ஸிந்து இவைகளில் உண்மை மயூரேசன் யார் என அறியாமல் மனங்கலங்கி தன் வீட் டிற்குச் சென்றான். விநாயகரும் வீடு செல்ல அவர் திரு மேனியில் ரக்தம் சிந்த காயங்களைக்கண்டு கலங்கினாள் உமையவள். குழந்தாய்! உனக்குத்திருமணம் செய்து காண அவாகொண்டேன். ரணகளம் சென்று ரண காயத்துடன் வந்தாயே! என வருந்தினாள். கணேஶனது பெருமையை நீ அறியாயா? அவன் முன்னே அரக்கர் நிற்பாரா? அவர் ஸாதாரண மானவர்போல் லீலை செய்கிறார் என்று கூறி ஶிவன் தேவியை ஸமாதானப் படுத்தினார். மயூரேசன் அருகிலுள்ள தேவர்ஷி கணங் களை ரண பூமிக்கனுப்பி யார் யார் இறந்தனர்? யார் மூர்ச்சையுற்றனர்? யார் யார் காயமடைந்தனர்? பார்த்து

வாருங்கள் என்றார். வஸிஷ்டர் முதலியவர் அங்கு சென்று எண்ணிறந்த வீரர்கள் இறந்ததையும் நந்தி வீரபத்ரர் முதலியவர் மூர்ச்சையடைந்திருப்பதையும் கூற, மயூரேசர் நமக்காக உயிர் துறந்தவர்களை எப்படி எழுப்புவது என வருந்தினர். கணேசா! இதென்ன லீலை! உனது கருணை கடாக்ஷம் போதாதோ இவர்களை எழுப்ப? எனினும் திரி புரயுத்தத்தில் மாண்டோரை துரோணர் சலத்திலுள்ள திவ்ய ஓஷதிகளைக் கொண்டுவந்து பிழைப்பித்ததை நினைவூட்டுகிறேன், என்றார் ஸ்கந்தர். ஆம்! நீ சொல்வது சரி! வீட்டிற்குச்சென்ற ஸிந்து பல கோடி ஸேனைகளுடன் போருக்கு வரப்போகிறான். இச்சமயம் யார் போவது? எவருக்கு அதைக்கொண்டு வர சக்தி இருக்கின்றது? என்றுகூறி தனது உடலில்பட்ட காற்றை அனுப்பி அனைவரையும் பிழைப்பித்தார்.

காலை எழுந்து கர்மாக்களை முடித்து தந்தையை வணங்கி போருக்குச் சென்றார் மயூரேசன். அறுந்த காதுகளுடன் பிறருக்கு முகத்தைக் காட்ட வெட்கப்பட்ட ஸிந்து படுக்கையில் புறண்டு தூக்கமின்றி சிந்தை கொண்டான். இதை அறிந்த துர்கா எனும் அவன் மனைவி ஏன் விசாரப்படுகிறீர்? மஹா வீரனல்லவா தாங்கள்! என்றாள். பிரியே! எழுபது கோடி ஸேனைகளை இழந்தேன். காதுகளையுமறுத்துப் பேரவமானம் ஊட்டினான் பகைவன். இனி என்ன செய்வது என்று சிந்திக்கிறேன். என்றான் ஸிந்து. நாத! தர்மத்தை நம்பி கெட்டவரில்லை. அதர்மத்தைக் கொண்டு வாழ்ந்தவரில்லை! தேவர் பிராம்மணர் முதலியவருக்கு துரோஹம் செய்து வாழ்ந்த நீர் இந்த்ரன் முதலிய தேவர்களை விடுவித்து விடுங்கள். மயூரேசன் அவர்களுடன் சென்று விடுவார். நாம் சுகமாக வாழலாம் என்றாள் மனைவி. பிரியே! நீ தம்பதிதர்மத்தையே கூறினாய்? வீரனுக்கு இது அழகா? போரில் தலையிட்டவன் அடிபட்டிறந்தால் க்யாதியுடன் வீர ஸ்வர்க்கம் கிட்டும். ஜயித்தால் க்யாதியுடன் பூமியை ஆள்வர். இருகாதுகளையும் ஒப்பற்ற பந்து வீரர்களையும் இழந்த நான் ஜீவிப்பது நியாயமல்ல என்று கூறி ஸேனைகளுக்கு உத்ஸாகமூட்டிப் போருக்குச் சென்றான் ஸிந்து. அவனது மைத்துனர்களான கலவிகலர் என்ற இருவரும் தாங்கள் ஜயித்து வருவதாகக் கிளம்பினர்.

இவர்களை எதிர்த்து நந்தியும் புஷ்ப தந்தனும் போரிட்டனர். மலைகளைப் பந்துபோல் பரஸ்பரம் எறிந்தனர். இரு வீரர்களும் சிறிது மூர்ச்சையாகி விழுவர். உடனே தெளிந்து எழுந்திருப்பர். நந்தியும் புஷ்பதந்தனும் மூர்ச்சித்து பூமியில் விழுந்ததைக் கண்டார் ஸ்கந்தன். வேகமாகவந்து விகலனைக்கொன்றார், வீரபத்ரன். எழுந்து ஒரு மலையால் கலனை அடித்துக் கொன்றார். இதை அறிந்த ஸிந்து கதறும் பொழுது அவன் புத்ரர்களான தர்மா தர்மர் போருக்கு வந்தனர்.

பத்துகோடி வீரர்கள் அவர்களைப்பின் தொடர்ந்தனர். மயூரேசர் ஆணைக்கிணங்க வீரபத்ரனும் ஆறுமுகனும் தர்மா தர்மர்களுடன் போர் புரிந்தனர். இவர்களது பராக்ரமத்தைப் பொறுக்க முடியாமல் அஸுர ஸேனை ஓடிற்று. தேவஸேனை ஜயகோஷம் செய்து மயூரேசனைப் போற்றிற்று. ஸ்கந்தன் தர்மா தர்மர்கள் கால்களைப்பிடித்துத் தூக்கி அவனியில் அறைந்து கொன்றார். இதைக் கேட்டு திடுக்கிட்ட ஸிந்து கதறினன். ராணியும் புத்ர சோகம் தாளாமல் புலம்பினள். தீயில் பட்ட புழு போல் துடித்தாள். ஸகிகள் பலவகையாக ஸமாதாநம் கூறினர். மஹாராக்ஞி! இவ்வுலகில் உடலெடுத்தவர் யார் தான் இறவாமலிருப்பர். அஶ்வத்தாமா, பலீ. வ்யாஸ. ஹநுமான், விபீஷணன், க்ருபர், பரசுராமர் இவ்வேழு பேர்களே சிரஞ்ஜீவி ஆவர். ப்ரவாஹத்தினல் இரு மரக் கட்டைகள் கூடும். பிரியும். அதேபோல் கர்மவஶத்தால் தாய் சேய் என கூடுகிறோம். கர்மா முடிந்தவுடன் பிரிவது ஸஹஜம். எவரிடமும் பற்றுவைக்கலாகாது. பற்றே துன்பத்திற்குக்காரணம் என்றனர்.

ஸிந்துவின் ஶோகம் கோபமாக மாறியது. ஶத்ருவைக்கொன்று புத்ர ஶோகத்தை அகற்றுவேன். என ஆக்ரஹத்துடன் போருக்குக் கிளம்பினன். இதனிடையில் ஸிந்துவின் தந்தையான சக்ரபாணி ஓடிவந்து ஸிந்தோ! செல்வச்செறுக்கால் நீ தர்மத்தை மறந்தாய். பெற்றோர் சொற்படி நடப்பது முதல்தர்மம். சக்ரன் முதலியோரை விடுவித்து மயூரேசனது அருளைப்பெற்றால் சுகமாக வாழலாம் என்றார். முன்னர் உன்னிடம் மதிப்பு வைத்திருந்தேன். கோடிக்கணக்கான எனது வீரர்களையும் புத்ர

மித்ராதிகளையும் கொன்ற பகைவனிடமா ஸந்தி? போய்வா நீ. உனக்கு நமஸ்காரம் எனக்கூறி போருக்கு வந்தான். மயூரேசன் அவனுடன் யுத்தம் செய்யக்கிளம்ப ஆறுமுகன் தான் செல்ல உத்தரவு பெற்று யுத்தம் செய்தார். வழக்கப்படி ஒரே கோஷம்! கோலாஹலம்! அடி! கொல்! என்ற சப்தம். பல ஶிரங்கள், கரங்கள் அறுந்து விழுந்தன. சூர்யனும் மறைந்தார். இருளில் ரணவெறியால் பகைவனென தன்னைச் சார்ந்த வீரர்களையே கொன்றனர். வீரபத்ரன் யானையைத் தூக்கி யானைமேலெறிந்து கொன்றார். குஹனும் சக்தியால் யானை ஸேனைகளை அழித்தார். நந்தி யானை உருவெடுத்து கஜங்களை அடித்துக்கொன்றார்.

அஶ்வ ஸேனைகளுடன் வந்த அஸுர வீரர்களையும் தேவ ஸேனை கொன்றது. காலாட்படைகளும் கொல்லப்பட்டனர். ஸிந்துவைக் கொல்வோம்! மயூரேசன் அருளால்! என தேவஸேனை ஜய கோஷம் செய்தது. இதைக் கண்ட ஸிந்து எவரை அனுப்பினாலும் ஜயம் தோன்றவில்லை. நானே செல்கிறேன் என்று புறப்பட்டு ஆக்னேயாஸ்த்ரத்தால் தேவர்களைக் கொளுத்தினான். குஹன் முதலிய அனைவரும் ப்ரளயகால அக்னி போன்ற அதன் தாபம் தாளாமல் மயூரேசனிடம் சென்றனர். அவர் ஶிவனை நினைத்துப் பரஶுவை ஏவினார். அது அக்னி ஜ்வாலையால் அஸுராஸ்த்ரத்தை அடக்கி அஸுர ஸேனையை எரித்தது. ஸிந்துவின் ஶரங்களையும் அடக்கி ஸேனையையும் மயூரேசன் அழித்தார். ஸிந்து பயந்து நடுங்கி என் செய்வதென்று அறியாமல் ஸ்திரீகள் இருக்குமிடத்தில் பதுங்கிக்கொண்டான். முனிவரும் தேவ ஸேனையும் போற்ற விநாயகர் இருப்பிடம் வந்தார். அவரது உடல் அடிபட்டு வ்ரணத்துடனிருப்பதைக்கண்டு தேவி வருந்தினாள். அவரது மஹிமையை விளக்கிப் போற்றினார்கள் முனிவர்கள்.

இடையில் நாரதர் வந்து இன்னும் ஸிந்துவை ஜயிக்கவில்லையே? எப்போது மயூரேஶர் விவாஹம் நடக்கும் என வருந்தினர். குஹன் முதலியோர் முனிவரே! மயூரேஶன் மஹிமையை அறிந்த நீரும் இப்படி வருந்துகிறீரே என்றனர். அவனைக் கொன்றபின் தான் விவாஹமென்றதாலும், அவன் இறவாததாலும் வருந்தினேன் என்றார்

நாரதர். மயூரேசன் அவரை நோக்கி உம்போன்றவர் தயையிருந்தால் அரை நிமிஷத்தில் அரக்கனை அழிப்போ மென நந்தீ பிருங்கி வீரபத்ரர் முதலியவர்களுடன் போருக்குக் கிளம்பினர். இவர்களது வீரஸிம்மநாதத் தைக்கேட்டு ஸிந்துவின் மனைவி கூறினாள். நாதா! என் சொல்லை தாங்கள் ஏற்கவில்லை. வீர நாதத்தைக் கேட்டீர் களா? நமது அரண்மனையை இடிக்கும் சப்தம் காதில் விழுகிறதா? இனியாவது ஸந்தி செய்துக் கொண்டு வாழுங்கள் என்றாள். இதை ஸிந்து காது கொடுத்துக் கேட்கவில்லை. ஸிந்து ஸேனையை முறியடித்துவிட்டு வீரர் ஸிந்துவின் வீட்டிற்குள் புகுந்தனர். ஸிந்து ஸர்ப்பாஸ்த் ரத்தால் வீரர்களைத் தாக்கினான். பிருங்கி கருடாஸ்த்ரத் தால் அதை அழித்து கர்ஜித்தார். ஸிந்துவும் நந்தியும் மல்ல யுத்தம் செய்தனர் நந்தி அஸுரனது கிரீடத்தைக் கீழே தள்ளி கர்ஜித்தார். வீரபத்ரன் ஸிந்து பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவன் மனைவியைத் தடியால் அடித்தார். ஸிந்துவை அடிக்கும் பொழுது கண்களை மூடிக்கொண்டு அவன் மனைவி கதறினாள். ஆவேசங் கொண்ட அஸுரன் அம் மூவர்களையும் தாக்கி மூர்ச்சை யாகும்படி செய்தான். குதிரை மீதேறி மயூரேசனைக் கொல்வேனென ஓடினான்.

இருவருக்கும் மிக உக்ரமாக போர் நடந்தது. ஸிந்து வின் ஆக்நேயாஸ்த்ரத்தை மேகாஸ்த்ரத்தாலும் வாயவ் யாஸ்த்ரத்தை மலை அஸ்த்ரத்தாலும் வஜ்ராஸ்த்ரத்தை அங்குசாஸ்த்ரத்தாலும் மயூரேசர் தடுத்தார். ஸிந்து இவரே தனக்கு ம்ருத்யு! இதே மரணகாலம் என நினைத் தான். மரண வெறிகொண்டு மயூரேசரைத் தாக்க எதிர்த்து ஓடிவந்தான். மயூரேசர் சிவனிடமிருந்து பெற்ற பரசுவை அவன் மீது ஏவினார். ஸிந்து எண்ணிறந்த சரவர்ஷத்தால் அதைத் தடுத்தான். ஆனால் அது ஸிந்து வின் நாபியில் உள்ள அம்ருதத்தை வெளிப்படுத்தியது. உடனே ஸிந்து கீழே விழுந்து உயிரைத் துறந்தான். தேவர் மயூரேசர் மீது புஷ்பமாறிப் பொழிந்து போற்றி னர். [பரப்ரும்ம ரூபம், சிதாநந்த ரூபம், ஸதாநந்தரூபம் ஸுரேசம் பரேசம்-குணாப்திம் குணேசம் குணாதீதமீசம் மயூரேசமாத்யம் நதாஸ்மோநதாஸ்ம:] என மயூரேச புஜங்கத்தை ஏழு சுலோகங்களால் துதித்தனர். (இதை

நித்யம் ஆயிரம் முறை ஜபித்தால் சிறையிலிருப்போர் விடுபடுவர்.)

ஸிந்து இறந்ததைக்கேட்டு அவன் மனைவியும் பெற்றோரும் ஆராத் துயரமடைந்தனர். அவன் உடலுக்கு விதிப்படி தீயிட அதில் அவனது பத்நி விழுந்து உயிரை விட்டாள். சக்ரபாணி மயூரேஶர் பெருமையை உணர்ந்து துதித்தார். உமக்கு என்ன வரம் வேண்டும் என பகவான் கேட்க, என் வீட்டிற்கு வந்து பொன்னடி சாத்தி அருள்புரிய வேண்டும் என்றார். மயூரேஶன் பதினெண் வாத்யங்கள் முழங்க கணங்களுடனும் ஸகல தேவர்ஷிகளுடனும் கூடி ஸிந்துவின் அரண்மனையில் நுழைந்து சக்ரபாணி விரும்பியபடி நவரத்ந ஸிம்மாஸநத்தில் அமர்ந்தார். இந்த்ரன் முதலிய தேவரைச் சிறையிலிருந்து விடுவித்தார். அனைவரும் மயூரேஶனைத் துதித்தார்கள். மயூரேஶன் ஆதித்யன் அம்பிகை விஷ்ணு கணநாதன் மஹேஶன் என்ற ஐந்து ரூபியாகக் காக்ஷி அளித்தார். ஸிந்துவும் மோக்ஷமடைந்தான். நாரதர் பிரார்த்தனைக்கிணங்கி பரமசிவன் விநாயகரது விவாஹத்திற்கு ஸகல தேவர்களையும் முனிவர்களையும் சக்ரவர்த்திகளையும் அழைத்துவர சிவகணங்களை அனுப்பினார். ஸகல தேவர்களும் வந்து சூழ்ந்தனர். மயூரேசருடன் ஆநந்த புவநத்தில் அநாதியாயிருக்கும் ஸித்தி புத்தி ஆகியவர்களே பிரும்மாவிற்கருள்புரிய பெண்களாகத் தோன்றினர். இதை அறிந்திருந்தாலும் மாயையால் மயங்கி தேவிகளின் அழகைக் கண்டு மோஹித்துத் தமக்களிக்கும்படி ஸகல தேவர்களும் வேண்டினர். கருணைக்கடலான மயூரேஶன் எல்லோரையும் ஆஸநத்திலமரச்செய்து, ஸித்தி புத்திகளிடம் ஸ்வயம்வர மாலைகளை அளித்து அவர்களுக்கு இஷ்டமானவரை மாலையிட்டு வரிக்கலாம் என்று கூறினார். அவர்கள் மயூரேசனையே வரித்தனர்.

விஶ்வகர்மா பார்வதியின் விருப்பப்படி ஸகல மங்கள த்ரவ்யங்களும் நவநிதியும் நிறைந்த விவாஹமண்டபத்தை அமைத்தார். உமையின் உத்தரவுபடி அவரவர்க்கும் ஏற்ற வண்ணம் இடமமைத்து அறுவகைச் சுவையுடன் அன்னம் அளிக்கப்பட்டது, வீதிகளெல்லாம் பச்சைப் பந்தல் வாழை தோரணம் கொடிகள் முத்துப்

பவழங்களால் கோலம், அகில் கட்டை வாஸனைப்புகை, பூர்ணகும்பம், ரத்ந தீபம், வாத்ய கோஷம், ஆடல்பாடல், முதலியன மிக்க சிறப்பாகக்காணப்பட்டன. விதிப்படி பிரும்மா கன்யகைகளைத் தாநம் செய்தார். முறைப்படி பாணிக்ரஹணம் மாங்கல்யதாரணம் ஹோமம் பொரிஹோமம் அம்மிமிதித்தல் முதலியன செவ்வனே நடைபெற்றன. தக்கவாய்ப்புகிடைத்ததென எல்லோரும் தம்பதிகளுக்குப் பலவகையான ஸன்மாநம் செய்தனர். வாத்யகோஷம்! ஸங்கீதத்வநி! ஜய ஶப்தம்! வேத ஆஶீர்வசநம்! தம்பதிகளைத் துதித்தல் வானளாவ ஒரே சப்தம். கோலாஹல குதூகலம். அன்னை பார்வதியின் ஆநந்தத்திற்கு அளவில்லை! வந்தவர்கள் அனைவர்க்கும் ஏற்ற வகையில் விருந்தளித்தாள். ஸாதாரண ஸ்த்ரீகள் போல இல்லற இன்பத்தில் மூழ்கினாள். இரு மருமகள்களுடன் வீடுவந்தாள். (ஸித்தி புத்தி மயூரேஶ விவாஹத்தைப் படிப்பவரும் கேட்பவரும் விரும்பிய பலனைப் பெறுவர்.) மயூரேஶர் பிரும்மாதி தேவர்களுக்கு விடையளித்து ஆநந்த புவநம் சென்றார். சிவனும் பார்வதீ தேவியும் ஸுப்ரமண்யனும் அவரை விட்டுப் பிரிய மநமின்றி வருந்தினர். த்வாபர யுகத்தில் ஸிந்தூரன் என்று ஓர் அஸுரன் தோன்றப் போகிறான். அவனைக்கொல்ல மறுபடியும் உனது புத்ரனாகவே வருவேன் என்று தேவியை ஸமாதானப்படுத்தினார். உம்முடன் என்னையும் அழைத்துச் செல்லுங்கள் என்ற குஹனுக்கு தனது மயிலைக்கொடுத்து மயூரத்வஜன் என்ற பெயர் சூட்டி வாழ்த்தினார்.

த்வாபரயுகத்தில் மூஷிகவாஹநனாக கஜாநநன் என்ற பெயருடன் எப்படி விநாயகர் அவதரித்தார்? என வியாஸர் கேட்க பிரும்மா கூறினார். பரமசிவன் ஒரு ஸமயம் பிரும்மலோகஞ் சென்றார். அவரைப் பார்த்தவுடன் வேலைக்காரர்கள் நன்கு அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த பிரும்மாவை எழுப்பினர். அவர் எழுந்திருக்கும் போது கொட்டுவா விட்டார். அதிலிருந்து மிக பயங்கர ஶரீரத்துடன் ஒருவன் தோன்றி கர்ஜித்தான். அதனால் பதிநான்கு லோகங்களும் நடுங்கின. பிரும்மா அவனை நோக்கி நீ யார்? என்றார். உலகெலாம் படைக்கும் உமக்கே தெரியவில்லையா? உமது கோட்டுவாயிலிருந்து

உண்டான உமது புத்ரன் நான். எனக்கும் பெயரிட்டு வஸிக்கத்தக்க இடமும் தாரும் என்ருன். நீ சிவந்த வாஸனை உள்ள வர்ணத்துடன் இருப்பதால் உனக்கு ஸிந்தூரன் எனப் பெயர். ஸகல தேவாஸுரர்களையும் அடக்கி ஆளும் ஶக்தி பெறுவாய். இதுவரை எனது ஸ்ருஷ்டியில் தோன்றிய ஒருவராலும் உனக்கு மரணம் இல்லை. நீ யாரை ஆலிங்கனம் செய்தாலும் அவன் இறப்பான். உனக்கு இஷ்டமான இடத்தில் வஸி என பிரும்மா கூறினர். உடனே அவன் பூலோகத்தை நாடிக் கிளம்பினன்.

நடுவழியில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. நான் ஒருவித தபஸ்ஸோ பூஜையோ செய்யவில்லை! கடுந்தவம் புரிந்தவரே இத்தகைய வரம் பெறுவர்! இவர் கொடுத்தது பலனைத்தருமா? இவரிடமே அதைப் பரீக்ஷிப்போமென திரும்பிவந்து அவரைத்தாக்க நினைத்துக் கர்ஜித்தான். அவனது எண்ணத்தை அறிந்த சதுர்முகன் புத்ர வாஞ்சையால் இத்தகைய வரத்தை அளித்தேன்! அது பாம்பிற்கு விஷமளித்தது போலாயிற்று. தீட்டிய மரத்திலேயே கூர் பாய்ந்த நீ கொடிய அஸுரனுவாய். ஆதி தெய்வமான விநாயகரே உன்னைப்போல் உருவெடுத்து உன்னைக்கொல்வார். ஸிந்தூர கணபதி என்று பெயர் பெறுவார் என்று அவனைச் சபித்துவிட்டு வைகுண்டம் ஓடினர் பிரும்மா. அவனும் பின் தொடர்ந்தான். பிரும்மா வந்த காரணத்தை விஷ்ணு விசாரித்துக் கொண்டிருக்கும்பொழுது ஸிந்தூரன் ஓடிவந்து போருக்கு அழைத்தான். பிரும்மா பிராம்மணர். நான் ஸத்வ குணங்கொண்டு பரிபாலிப்பவன். எங்களுக்கேது பலம்? கைலாஸம் செல். ருத்ரன் உனது விருப்பத்தைப்பூர்த்தி செய்வார் என்ருர். ஸிந்தூரன் கைலைசெல்ல ஆங்குள்ள கணங்களையும் தவம் புரியும் உமாமஹேசர்களையும் கண்டான். தவஸியுடனு போர் தொடுப்பது? அழகிய இவளை எடுத்துச் செல்கிறேன் என தேவியைத் தூக்கிச் சென்ருன். கண்ணைத் திறந்து தேவி தான் ராக்ஷஸனிடமிருப்பதைக் கண்டு கதறினுள். அதைக்கேட்டு நிஷ்டையை விட்டு விருஷபத்தின் மீதேறி ஸிந்தூரனைத் தொடர்ந்தார் சிவன்.

